
CHANDAMAMA

# POLIO, QUIT INDIA!

Protect your child and the nation!
Participate in the mass
polio vaccination!




## December 7, 1997
## January 18, 1998

CALLING PARENTS!

Even if

- the child is indisposed or has diarrhoea
- the child had been given polio drops earlier

**TO ENSURE CENT PER CENT PROTECTION**



**Remember to**

Take your children (under 5) to the nearest immunisation booth / centre to receive

**TWO ADDITIONAL DROPS OF THE ORAL POLIO VACCINE**

**on National Immunisation Days**



Be a part of the global Polio Eradication Campaign




**You don't just have to protect, but help eradicate POLIO**



# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி






## மறந்து விட்ட எழுச்சி!

இந்தியாவின் முதலாவது சுதந்திரப் போர் 1857ல் ஆங்கிலேயருக்கு எதிராக சிப்பாய்கள் நடத்திய பேரெழுச்சி எனப்பொதுவாகக்கூறப்பட்டாலும்இதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே பீர்பூம் பகுதி வாழ் மலை வாசிகளும் சந்தலர்களும் தம் பகுதிகள் சுதந்திர மானவை என அறிவித்து ''நாங்கள் கடவுளின் குழந்தைகள். வேறு யாருடைய வேலைக்காரர்களல்ல'' என அடித்துக் கூறினார்கள். அதை ஆங்கில அதிகாரி களே எழுதி வைத்திருக்கிறார்கள்.

ஆனால்இவர்கள் ஒடுக்கப்பட்டு நசுக்கப்பட்டார்கள் இவர்களிடம் இரக்கமில்லாது வேலை வாங்கி கிழக் கிந்தியக் கம்பெனி துன்புறுத்தியது. ஐம்பது யானை களை சாராயம் குடிக்க வைத்து இவர்கள் மீது ஏவியது. இந்த அப்பாவி மக்களையும் அவர்களது மனைவி, மக்களையும் யானைகள் மிதித்துக் கொன்றன. இதனால் அம்மக்கள் கொதித்தெழுந்து ஈட்டிகளாலும் அம்பு களாலும் தாக்கவே கிழக்கிந்தியக்கம்பெனிசிப்பாய்கள் துப்பாக்கிகளாலும் பீரங்கிகளாலும் தாக்கினார்கள். ஆனாலும் அப்பகுதி மக்கள் அந்த சிப்பாய்களை உறுதி கொண்ட நெஞ்சுடன் எதிர்த்துத் தம் உயிர்களையே தியாகம் செய்தனர்!

மதிமுகம்: 101 டிசம்பர் 1997 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00



செய்திகளும் தகவல்களும்

# போலண்டில் புதிய அரசாங்கம்

போலண்டில் மீண்டும் கம்யூனிஸ்ட் அல்லாத அரசு அமைந்துள்ளது. செப்டம்பர் 21ல் நடந்த பொதுத்தேர்தலில் போலண்டு மக்கள் சாலிடாரிடி கட்சியிடம் ஆட்சிப் பொறுப்பை அளித்திருக்கிறர்கள்.

இரண்டாவது உலகப் போர் 1945ல் முடிந்ததும் போலண்டில் ஆட்சி பீடத்தில் இருந்த கம்யூனிஸ்ட் கட்சி சுமார் நாற்பது ஆண்டு காலத்திற்குஇருந்தது. அதன் பிறகு அதாவது இப்போதைக்கு சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் 'சாலிடாரிடி' கட்சி ஆட்சியைக் கைப்பற்றியது.



ஜெர்மனியின் சர்வாதிகாரி அடால்ஃப் ஹிட்லர் 1939ல் போலண்டை ஆக்கிரமித்ததால் இரண்டாவது உலகப் போர் மூண்டது. அப்போது சோவியத் யூனியனுக்கும் போலண்டிற்குமிடையே ஆக்கிரமிப்பு செய்யக் கூடாதென்று ஒப்பந்தம் அமலில் இருந்தது. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய மூன்று நாடுகள் சேர்ந்த கூட்டமைப்பு 'அச்சு நாடுகள்' என அழைக்கப்பட்டது. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் மற்றும் பல நாடுகளின் கூட்டமைப்பு நேசநாடுகள் என்று அழைக்கப் பட்டது.

ஆறு ஆண்டுகள் நடந்த அப்போரில் ஆரம்ப காலத்தில் பல நாடுகளை ஆக்கிரமித்த ஹிட்லர் சோவியத் யூனியன் மீது பாய்ந்தான். அப்போது சோவியத் யூனியன் நேச நாடுகளுடன் சேரத் தீர்மானித்ததால் ஐரோப்பாவில் ஹிட்லரின் வெற்றிநடைக்கு முட்டுக்கட்டை போடப்பட்டது. சோவியத் யூனியன் போலண்டையும் மற்றும் சில ஐரோப்பிய நாடுகளையும் ஹிட்லரின் பிடியிலிருந்து விடுவித்தது. நேச நாடுகளின் படைகள் மேற்கிலிருந்தும் சோவியத் படைகள் கிழக்கிலிருந்தும் ஜெர்மனியைத் தாக்கி அதன் தலை நகரான பெர்லினுள் நுழைந்தன.

ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டான். ஜெர்மனி மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனி எனப் பிரிக்கப்பட்டது. ஆனால் 1990ல் ஒன்று பட்ட ஜெர்மனியாகியது.

தமக்கு விடுதலை வாங்கித் தந்த சோவியத் யூனியனை போலண்டு மக்கள் பாசத்துடன் நோக்கினார்கள். போலண்டில் கம்யுனிஸ்ட் ஆட்சி ஏற்பட சோவியத் யூனியன் உதவியது. போருக்குப் பின் அங்கு 1948ல் நடந்த தேர்தலில் கம்யுனிஸ்ட்கள் ஆட்சியைக்கைப்பற்றினார்கள். இதற்கு முப்பது ஆண்டுகளுக்குப் பின் 'சாலிடாரிடி' தொழிற்சங்கம் தோன்றி பல இயக்கங்களையும் போராட்டங்களையும் நடத்தியது. 1983ல் சாலிடாரிடி கட்சி வலுவான அரசியல் கட்சியாகியது. 1989ல் லேக் வால்சாவின் தலைமையில் முதலாவது கம்யுனிஸ்ட்டல்லாத அரசாங்கம் ஏற்பட்டது. ஆனால் 1993ல் மீண்டும் கம்யுனிஸ்ட் கட்சி அதிகாரத்திற்கு வந்தது. லேக் வாலசா அதிபர் பதவியிலிருந்து விலக வேண்டியதாயிற்று.

இதற்கு நான் ஆண்டுகளுக்குப் பிறகு க்ரிஜக் வியூனிஸ்கி தலைமையில் அதிசயிக்கத் தக்க விதத்தில் தற்போது ஆட்சிக்கு மீண்டும் வந்துள்ளது. ஜெர்ஸப்யுசிக்கை அக்கட்சி பிரதம மந்திரியாக நியமித்துள்ளது.





# அடித்தது யோகம்!

மரகதபுரி மன்னனின் அரசாங்கப் புரோகிதர் சாம்பசிவ சாஸ்திரி. அவர் நன்கு படித்தவர். அவரோடு இருந்த அவரது மைத்துனன் சங்கர சாஸ்திரி அதிகம் படிக்காதவன். ஆனால் வாய்ச் சொல் வீரன். எவரையும் தன் பேச்சால் மடக்கி விடக் கூடியவன்.

ஒருமுறை சாம்பசிவ சாஸ்திரி தன் மனைவியிடம் ''எனக்கு ஒரே கவலையாக இருக்கிறது. நம் மன்னர் தம் மகளை நம் அண்டை நாட்டு மன்னனின் மகனுக்கு மணம் செய்து வைக்க விரும்புகிறார். ஆனால் மாணிக்கபுரியோ மிகவும் பெரிதும் பலம் பொருந்தியதுமான நாடு. அதனால் அந்நாட்டு மன்னனிடம் எப்படிப் பேசுவது என்று யோசித்துக்கவலைப் பட்டுக்கொண்டிருக்கிறார்'' என்றார். அதைக் கேட்ட அவரது மனைவி, என் தம்பி சங்கரனை அனுப்பினால் அம் மன்னருடன் பேசி காரியத்தை முடித்துக் கொண்டு வருவான்'' என்றாள்.

சாம்பசிவ சாஸ்திரியோ ''உன் தம்பியையா அனுப்புவது? அவன் ஒரு உதவாக்கரை. நாலு காசு சம்பாதிக்கத் தெரியாதவன். தனக்கு ஒரு வேலையைத் தேடிக் கொள்ள முடியாமல் ஊர் சுற்றி வெட்டி அரட்டை அடிக்கும் உன் தம்பியால் இதைச் செய்ய முடியாது'' என்றான்.

அவர்கள் இருவரும் அடுத்த அறையிலிருந்து பேசியதை சங்கர சாஸ்திரி கேட்டு விட்டான். அவனுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. அவன் தன் மனதில் ''நான் மாணிக்கபுரிக்குப் போய் அந்நாட்டு மன்னனிடம் இத் திருமணத்தைப் பேசி முடித்து நம் மன்னரிடமிருந்து பொன்னும் பொருளும் மானியமும் பெற்று என் அத்தானை அசர்த்தி விடுகிறேன்'' என எண்ணி அப்போதே மாணிக்கபுரிக்குப் புறப்பட்டான்.

மரகதபுரிக்கும் மாணிக்கபுரி

—சிவனார் செல்வன்—

எல்லைக்குமிடையே ஒரு அடர்ந்த காடு இருந்தது. அதன் வழியாகச் செல்ல யாவரும் பயப்பட்டனர். ஏனெனில் அதில் ராட்சஸர்கள் இருந்த தால் மக்கள் அக்காட்டு வழியில் செல்லாமல் சுற்றுப் பாதையில் போய் வந்தனர். சங்கர சாஸ்திரிக்கோ அவசரம். அதனால் அந்தக் காட்டு வழியிலேயே அவன் சென்றான்.

வெகு தூரம் நடந்து அவன் களைத்துப் போனான். அப்போது அவன் கண்ணில் ஒரு குளம் தென்படவே அதன் நீரைக் குடித்து விட்டு அதன் கரையில் ஒரு மரத்தின் கீழ் படுத்துத் தூங்கினான். சற்று நேரமானதும் பூகம்பம் ஏற்படுவது போலப் பயங்கர ஒலியைக் கேட்டு அவன் கண் விழித்துப் பார்த்தான். அவன் முன் ஒரு கிழ ராட்சஸி நின்று கொண்டிருந்தாள். அவள் அவனைத் தட்டி எழுப்பி "யாரடா நீ?" என்று அதட்டிக் கேட்டாள்.

சங்கர சாஸ்திரி பயந்து நடுங்கி "என் பெயர் சங்கர சாஸ்திரி" என்றான். கிழ ராட்சஸியும் "சரி! இங்கு ஏன் வந்தாய்? இது எங்கள் பகுதி". எனவே சற்றுத் துணிவு கொண்ட சங்கரசாஸ்திரி "நான் ஒரு சோதிடன். இன்று உன்னிடம் நான் அகப்பட்டுக் கொண்டு முழிக்க வேண்டுமென்று விதிதான் என்னை இங்கே அனுப்பியுள்ளது. உனக்கு என்னால் ஏதோ ஒரு வேலை ஆக வேண்டும் போலிருக்கிறதே!" என்று சற்று தைரியத்துடன் கேட்டான். அந்த ராட்சஸியும் அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டுப் "ஓ! நீ சோதிடனா? அப்படியானால் என் மகளுக்கு எப்போது கல்யாணம் நடக்கும் என்று சொல் பார்க்கலாம்" என்று கூறி பலமாகக் கை தட்டினாள். மறு நிமிடம் இளம் ராட்சஸி ஒருத்தி அங்கு வந்தாள்.



கிழ ராட்சஸியும் "இவள் பெயர் கஜசிங்கி. இவளை மணக்கப் பல ராட்சஸ இளைஞர்கள் முன் வந்தார்கள். ஆனால் நான் இவளை கோரமுகன் என்ற ராட்சஸனுக்கே மணம் செய்து வைக்க விரும்புகிறேன்" என்றாள். சங்கர சாஸ்திரியும் "ஓ. அப்படியா! பெயர்ப் பொருத்தம் சரியாக உள்ளது. இரண்டு பேர்களின் பெயர்களிலும் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. இவள் இளம் பெண். அழகாகவும் இருக்கிறாள். அந்த கோரமுகன் இங்கே ஐந்து கல் தூரத்தில்தான் இருக்க வேண்டும். இன்னமும் ஐந்து நாட்களில் இந்த விவாகம் நடந்துவிடும்" என்று ஒரு போடு போட்டான்.

அதைக் கேட்ட ராட்சஸி "அப்படி நடந்து விடுமா? நீ கூறியது போல கோரமுகனின் குகை இங்கிருந்து ஐந்து கல் தூரத்தில் தான் உள்ளது. நீ மட்டும் அவனைக்கண்டு பேசி இந்தக் கல்யாணம் நடக்கச் செய்துவிட்டால் உனக்கு இரண்டு மூட்டை தங்க நாணயம் கொடுக்கிறேன். ஆனால் நீ அந்த கோரமுகனிடம் பேசிவிட்டு உயிருடன் திரும்பி வர வேண்டுமே. அவன் மகா முரடனாயிற்றே" என்றாள். சங்கரசாஸ்திரியும் "என்னிடம் சொல்லி விட்டாயல்லவா? இனி கவலையை விடு. நான் இந்தக் கல்யாணம் நடக்கும்படிச் செய்து புண்ணியம் சம்பாதித்துக் கொள்வதோடு நீ கொடுக்கும் தங்க நாணயங்களையும் பெற்றுக் கொள்கிறேன்." என்று கூறி கோரமுகனின் குகையைத் தேடிச் சென்றான்.

சங்கர சாஸ்திரி எளிதில் அக் குகையைக் கண்டு பிடித்து விட்டான். அக் குகையின் முன் எலும்புகள் சிதறிக் கிடந்தன. அவன் கடவுளை வேண்டியவாறே அந்த குகைக்குள் சென்றான். அப்போது அங்கு ராட்சஸன் கோரமுகன் குறட்டை விட்டு நன்கு தூங்கிக் கொண்டிருந்தான். சங்கர சாஸ்திரி உரத்த குரலில் "கோரமுகரே! நான் சங்கர சாஸ்திரி வந்திருக்கிறேன். உமக்கு என் பணிவான வணக்கங்கள்" என்று கூவினான்.

கோரமுகனின் தூக்கம் கலைந்தது. அவன் எழுந்து உட்கார்ந்து "என்னைத் தூக்கத்திலிருந்து உரக்கக் குரல் கொடுத்து எழுப்பிய உன்னைப் பாராட்டுகிறேன். ஏனெனில் எல்லோரும் என் பெயரைக் கேட்டே நடுங்குவார்கள். ஆனால் நீயோ என் குகைக்குள் வந்ததோடு நில்லாமல் என்னைப் பார்த்து பயப்படாமல் தூங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பி இருக்கிறாய். நீ துணிச்சல் மிக்கவன். உனக்கு நிறையப் பரிசு கொடுக்கவே விரும்புகிறேன். என்னிடம் ஒரு மூட்டை



நிறைய நகைகள் உள்ளன'' என்றான். சங்கர சாஸ்திரியும் ''என்னை நீங்கள் பாராட்டியதற்கு நன்றி. நான் உங்களுக்கு நன்மை செய்யவே வந்திருக்கிறேன். அதனால் நீங்கள் எனக்குக் கெடுதல் செய்ய மாட்டீர்களென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது'' என்றான். அதைக் கேட்ட கோரமுகன் ''நீ மிக நன்றாகப் பேசுகிறாய். ஆமாம் எனக்கு ஏதோ நன்மை என்றாயே. அது என்ன?'' என்று கேட்டான்.

சங்கர சாஸ்திரியும் ''எல்லாம் உங்கள் நன்மைக்குத்தான். நீங்கள் மணக்க ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து விட்டு வந்திருக்கிறேன்'' என்றான். அதுகேட்டு கோரமுகன் ''கல்யாணமா? எனக்கா? மணப் பெண் யார்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான். சங்கர சாஸ்திரியும் ''கஜசிங்கி தான். அவளைப் பற்றி கேள்விப்பட்டிருப்பீர்களே'' என்றான். கோரமுகனும் ''ஆம். கேட்டிருக்கிறேன். அவளை மணக்க எல்லோரும் போட்டி போடுகிறார்களாமே. அவள் அப்படிப்பட்ட அழகியா என்ன?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

சங்கரசாஸ்திரியும் ''ஆமாம். தேவலோகத்து ரம்பை அவளிடம் அழகிற்குப் பிச்சை வாங்க வேண்டும். அவளைத்தான் உங்களுக்கு மணம் செய்து வைக்க எண்ணுகிறேன். பெயர்ப் பொருத்தமே சரியாக உள்ளது'' என்றான். கோரமுகனும் ''அப்படியா? மிகவும் சந்தோஷம் அப்படியானால் இப்போதே கிளம்பிப் போய் அந்தப் பெண்ணையும் அவளது தாயாரையும் பார்க்கலாம். நான் அந்தப் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேனேயொழிய நேரில் பார்த்தது இல்லை. அவள் நீ கூறியது போல அழகியால் இருந்தால் அவளுடன் என் திருமணத்தை நிச்சயித்து விடலாம். கூடவே இங்குள்ள நகை மூட்டையையும் எடுத்து வருகிறேன்.





மணப் பெண்ணிற்கும் கொடுத்து உனக்கு அவற்றில் சிலவற்றைப் பரிசாக அளிக்கலாம்'' என்றான். சங்கர சாஸ்திரியும் மறு வார்த்தை பேசாமல் கோரமுகனுடன் கிளம்பினான். நகை மூட்டையை அவனது தோளின் மீது வைத்து தானும் ஏறி உட்கார்ந்து கொண்டுதான் சென்றான்.

சங்கரசாஸ்திரியும் கோரமுகனும் வருவதைச் சற்று தூரத்திலிருந்து பார்த்து விட்ட கஜசிங்கி தன் தாயாரிடம் ''அம் மணமகன் இருட்டிய பிறகு நம்மைப் பார்த்தாலே என் அழகை அவன் தெரிந்து கொள்ள முடியும்'' என்று கூறினாள். அதுகேட்டு கிழ ராட்சஸி சிரித்து ''அடி அசடே. நம் ராட்சஸர்களுக்கு இரவில்தான் நன்றாகப் பார்க்க முடியும். பகலில் அவ்வளவாக்ப் பார்க்க முடியாது. அதனால் அவன் இரவான பின்தான் உன்னை நன்கு பார்ப்பான். அதனால் நீ கவலைப் படாதே. இதையெல்லாம் சங்கர சாஸ்திரி பார்த்துக் கொள்வான்'' என்றாள்.

கிழ ராட்சஸி கூறியபடியே சங்கர சாஸ்திரி கோரமுகனை இருட்டிய பிறகே அழைத்து வந்தான். கோரமுகனும் கஜசிங்கியைக் கண்டு சங்கர சாஸ்திரியிடம் ''ஆஹா! நீ சொன்ன மாதிரி பெண் ரம்பை போலத்தான் இருக்கிறாள். ராட்சஸப் பெண்களில் இப்படிப்பட்ட அழகி கூட இருக்கிறாளா? நாம் இப்போதே என் திருமணத்தை இவளுடன் நிச்சயம் செய்து விடலாம்'' என்றான். கஜசிங்கியும் கோரமுகனை மணக்கச் சம்மதிக்கவே ராட்சஸ முறையில் திருமணமும் நடந்து விட்டது. சங்கர சாஸ்திரியும் ''உங்கள் இருவரின் திருமணத்தை நடத்தி வைத்து விட்டேன். இனி எனக்கு கஜசிங்கியின் தாயார் இரண்டு மூட்டைத் தங்க நாணயங்களையும், கோரமுகன் தான் கொடுப்பதாகச் சொன்ன நகைகளையும் கொடுத்து விட்டால் நான் சந்தோஷமாக என் ஊருக்குத் திரும்பிச் செல்வேன்'' என்றான்.

ராட்சஸனும் சிரித்தவாறே ''சங்கர சாஸ்திரி! நீ காரியத்தில் கண்ணாய் இருக்கிறாய் உன் பேச்சு சாதூரியமும் சொல்ல முடியாது. நீ எங்கே போனாலும் பிழைத்துக் கொள்வாய். உன்னைப் பாராட்டுகிறேன்'' என்றான்.

அதன் பின் ராட்சஸனும் கிழ ராட்சஸியும் தாம் கூறியபடியே பணத்தையும் நகைகளையும் அவனுக்குக் கொடுத்தார்கள். அவன் எல்லோருக்

கும் வணக்கம் செலுத்தி விடை பெற்றுக்கொண்டு மூட்டைகளை எடுத்துத் தன் இரு தோள்களின் மீது வைத்துக் கொண்டுத் தன் ஊரை நோக்கி புறப் பட்டான்.

போகுமுன் அவன் ராட்சஸர்களிடம் ''உங்கள் நன்மைக்காக இதைச் சொல்கிறேன். இந்தக் காட்டின் இரு புறத்திலுமுள்ள இரு நாட்டு மன்னர் களும் தம் படைகளோடு இரு புறங் களிலிருந்தும் இக் காட்டிற்குள் நுழைய வந்து கொண்டிருக்கிறார்கள். அதனால் வேறு எங்காவது தப்பி ஓடி விடுவதுதான் உங்களுக்கு நல்லது'' என எச்சரித்தான். அதைக் கேட்ட கோரமுகன் ''என்னை வெல்ல யாராலும் முடியாது'' எனவே சங்கர சாஸ்திரி ''அப்படியானால் உன் பாடு, அந்தப் படைகளின் பாடு. உங்களை எச்சரிக்க வேண்டியது என் கடமை. ஏனென்றால் எனக்கு ஏராளமாகப் பணத்தையும் நகைகளையும் கொடுத்திருக்கிறீர்கள். அதற்கு நன்றி செலுத்தும் விதத்தில் இதைக் கூறினேன்.'' என்று கூறியவாறே சென்று விட்டான். கோரமுகனும் சற்று யோசித்துப் பார்த்தான் தனக்குக் குடும்பம் என்றும் மனைவி என்றும் ஏற்பட்டு விட்டதால் இனிப் பொறுப்போடு நடந்து கொள்ள வேண்டுமென எண்ணி சங்கர சாஸ்திரி கூறிய அறிவுரையின்படி தன் மனைவியையும் மாமியாரையும் அழைத்துக்கொண்டு எங்கோ போய் விட்டான்.

சங்கர சாஸ்திரி கொஞ்சமும் கவலைப்படாமல் நடந்து போய்த் தலைநகரை அடைந்தான். அவனைக் கண்ட சாம்பசிவ சாஸ்திரி ''எங்கே போயிருந்தாய் சங்கரா?'' என்று கேட்கவே அவனும் ''என்னை உதவாக்கரை என்றும் ஒரு காசு கூட சம்பாதிக்கத் தெரியாதவன் என்றும் அன்று என் அக்காவிடம் சொன்னீர்களே. நான் வீட்டை விட்டுப் போனேன். அதனால் எனக்கு யோகம் அடித்தது. பணத்தோடு வந்திருக்கிறேன்'' என்று தன் தோளின் மீதிருந்து மூட்டைகளை இறக்கி அவற்றிலிருந்த பணத்தையும் நகைகளையும் காட்டி அவை கிடைத்த விதத்தையும் கூறினான்.

சாம்பசிவ சாஸ்திரியும் ''ஆமாம். உனக்கு அடித்தது யோகம்'' என்று கூறி மகிழ்ந்தார்.



# சிறந்த படைப்பு!

வீரபுரி சமஸ்தானத்தில் கவிஞர்களுக்கு மிகுந்த ஆதரவு கிடைத்தது. அதனால் அந் நாட்டில் எல்லோரும் கவிதைகள் எழுதி ஆஸ்தானக் கவிஞர் கலாதரரிடம் கொடுத்து மன்னரின் ஆதரவுக்காக வேண்டிலானார்கள். இதனால் தரம் குறைந்த கவிதைகளை ஏராளமாகக் கலாதரர் பார்த்துப் புறக்கணிகக வேண்டி வந்தது.

ஒரு முறை ராமய்யன் என்பவன் முத்தாயியின் முத்து மாலை, காத்தாயியின் காசு மாலை என்று இரு கவிதைப் படைப்புகளை எழுதி எடுத்துக் கொண்டு போய் ஆஸ்தான கவிஞர் கலாதரரைக் கண்டு ''ஐயா! என் இந்த இரு படைப்புகளில் சிறந்ததற்கு அரசரின் ஆதரவும் சன்மானமும் கிடைக்கச் செய்யுங்கள்'' என்று வேண்டிக் கொண்டான்.

கலாதரரும் முதலில் முத்தாயியின் முத்து மாலை என்ற படைப்பைப் படித்துப் பார்த்தார். அது மகா மட்டமாய் இருந்தது. அதிலிருந்தே ராமய்யனுக்குக் கவிதை எழுத வராது என்பது கலாதரருக்குத் தெரிந்துவிட்டது.

அவர் அதைப் படித்து முடித்ததும் ராமய்யன் ''என் இரண்டாவது படைப்பான காத்தாயியின் காசுமாலையையும் படித்தும் பாருங்கள்'' என்றான். கலதாதரரும் ''வேண்டியதில்லை. இதைப் படித்ததிலிருந்தே அது எப்படி சிறப்பாய் இருக்கும் என்பது புரிந்துவிட்டது.'' எனக் கூறி இரு படைப்புகளையும் அவனிடம் திருப்பிக் கொடுத்து விட்டார்.

ராமய்யன் தலை குனிந்து கொண்டு தன் இரு படைப்புகளையும் வாங்கிக் கொண்டு சென்றான்.





# மாமன்னர் அசோகர்

## 11

(மகத மன்னர் பிந்து சாரரின் உடல் நிலை கவலைக்கிடமாக இருந்தது. அவனது மூத்த மகன் சுசிம்மன் தட்சசீலத்திலும் மற்றொரு மகன் அசோகன் உஜ்ஜயினியிலும் அப்போது இருந்தனர். உடனே பாடலிபுத்திரத்திற்கு வரும்படி அவர்களுக்குச் செய்தி போயிற்று. யார் முதலில் தலை நகரை அடைவானோ அவனுக்கே மகத ஆட்சி கிட்டும். அசோகனின் நண்பன் யசன் சுசிம்மனை தட்சசிலத்திலிருந்து கிளம்பாமல் நிறுத்த இரு நடன மாதுக் களை அனுப்பினான். அவர்கள் முன்பு சுசிம்மனால் அசோகனைக் கொல்ல அனுப்பப் பட்டவர்களே... அதன் பிறகு—)

பாடலிபுர மக்கள் மன்னர் பிந்து சாரரின் உடல் நிலை மோசமாகி விட்டது கேட்டுக் கவலைப் பட்டனர். அதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. பிந்து சாரருக்குப் பின் கொடியவனான சுசிம்மன் மகத மன்னனாகி விடுவானோ என்பதே அது. எல்லோரும் அசோகன் மன்னனாகி விட்டால் நாடு சுபீட்சமாக இருக்கும் என்று எண்ணினார்கள். எனவே ஆங்காங்கே கும்பல் கும்பலாக கூடி மகதத்தின் எதிர் காலம் பற்றி விவாதிக்கலானார்கள்.

உஜ்ஜயினிலிருந்து அசோகன் பாடலிபுத்திரத்திற்குப் புறப்பட ஏற்பாடுகளை செய்து கொண்டிருந்தான். அப்போது யசன் படைத் தலைவர்களை அழைத்து ''அன்புச் சகோதரர்களே! இப்போது விதி மகதத்தோடு மட்டுமல்லாமல் நம்மையும் ஆட்டி வைக்கப் போகிறது. மகதம் பாழ் போவதை நாம் மௌனமாகப் பார்த்



துக் கொண்டிருக்க வேண்டுமா அல்லது சந்திரகுப்த மௌரியரால் நிறுவப்பட்ட இந்த சாம்ராஜ்யத்தை எப்பாடுபட்டாவது நாம் காக்க வேண்டுமா என்பதே இப்போது நம் முன் உள்ள பிரச்னை'' என்றான்.

படைத் தலைவர்களில் மூத்தவன் ''ஆம். நாம் மகத ராஜ்யம் சீரழிந்து போக விடக் கூடாது. அது தலை நிமிர்ந்திருக்க நாம் எதையும் செய்யத் தயாராக இருக்கிறோம். இளவரசர் அசோகரும் நீங்களும் என்ன செய்ய வேண்டுமென்று கட்டளை இடுகிறீர்களோ அதை நிறைவேற்றி வைக்கத் தயாராக இருக்கிறோம்'' என்று கூறினான்.

யசனும் ''நண்பர்களே! இதுவரை நாம் வெளியிலிருந்து தாக்கிய எதிரிகளைத் தான் எதிர்த்துப் போராடி இருக்கிறோம். ஆனால் இப்போது நம் எதிரிகள் உள்நாட்டில் இருக்கிறார்கள். அவர்கள் மிகவும் ஆபத்தானவர்கள் அவர்களை எதிர்த்து ஒழிக்க வேண்டுமானால் நாம் முழுமனதுடன் இம் முயற்சியில் இறங்க வேண்டும். இதற்குத் துணிச்சலும் தைரியமும் வேண்டும்'' என்றான்.

அந்தப் படைத்தலைவனும் ''நாங்கள்தாம் உங்கள் கட்டளைப்படி நடப்பதாக உறுதி மொழி அளித்து விட்டோமே. கட்டளை இட்டால் எதையும் செய்து முடிப்போம்'' என்றான். யசனும் ''சரி. நம் மன்னரின் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டதாகச் செய்தி வந்திருக்கிறது. அவர் எந்த நிமிடமும் மரணமடையலாம். நான் அங்கிருந்து புறப்பட்ட போது மன்னர் மரணப் படுக்கையில் இருந்தார். வைத்தியர்களும் கையை விரித்து விட்டார்கள். பிந்துசாரருக்குப் பின் யார் மகதத்தின் அரியாசனத்தில் அமர வேண்டுமென நீங்கள் நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

ஒரு நிமிட நேரத்திற்கு அமைதி நிலவியது. அதன் பிறகு மூத்த படைத் தலைவன். ''நான் கேள்விப்பட்டது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது. மன்னரே தனக்குப் பின் இளவரசர் சுசிம்மர்தான் பட்டத்திற்கு வரவேண்டுமெனக் கூறி விட்டாராமே. இவ்வாறு அவர் செய்திருக்கக் கூடாது'' என்றான். யசனும் ''ஏனோ?'' என்று கேட்கவே படைத் தலைவனும் ''இளவரசர் சுசிம்மர் கர்வம் பிடித்தவர். முரடர். முட்டாள்தனமாக நடப்பவர். ஒரு முறை ஒரு பறவை அவரது தலைப் பாகை மீது

எச்சமிட்டுவிட்டது. அதைச் சரியாகக் கவனிக்கவில்லை என்று கூறி தன்னுடன் வந்த மெய்க் காவலாளியின் தலையை வெட்டி எறிந்து விட்டார். இந்த மாதிரியான ஒருவர் நம் நாட்டின் அரசரானால் நாட்டின் கதி என்ன ஆகுமோ என்றுதான் பயப்படுகிறேன்'' என்றான்.

யசனும்'' அப்படியானால் சுசிம்மன் அரியாசனத்தில் ஏறாமல் தடுக்க வேண்டியது நம் தலையாய கடமை. அவனுக்கு பதிலாக அசோகரை மகதத்தின் மன்னராக்குவதுதான் சரி என்று நினைக்கிறேன்'' என்றான். மற்ற படைத்தலைவர்களும் ''ஆம். நீங்கள் சொல்வது முற்றிலும் சரியே'' என்றனர்.

யசனும் ''சரி. நாம் மட்டும் இப்படி நினைப்பதால் அது நடந்துவிடாது. இதற்கு நாம் வழி செய்தாக வேண்டும். நம் வீரர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும். பலவித ஆபத்துகளை எதிர்நோக்க வேண்டும். இவற்றிற்கெல்லாம் நீங்கள் தயாரா!'' என்று கேட்டான். படைத் தலைவர்களும் ''நாங்கள் அசோகருக்காக எங்கள் உயிரையும் கொடுக்கத் தயார்'' என்றனர்.

அப்போது அசோகனே அங்கு வரவே மூத்த படைத் தலைவன் ''வருக, வருக. வருங்கால மகத மன்னர் அசோகரே! வருக. நிம் கொற்றம் வெல்க!'' என்று வாழ்த்தினான். எல்லோரும் அசோகனுக்கு வணக்கம் செலுத்தினார்கள். யசனும் ''இனி நாம் தாமதிக்கக் கூடாது. திடீரென உஜ்ஜயினி தாக்கப்பட்டால் எந்தப் படைத் தலைவன் இங்கே இருந்து அத்தாக்குதலை முறியடிக்க வேண்டுமென்று



தீர்மானியுங்கள். மற்றவர்கள் நாளைக் காலை அசோகருடன் பாடலிபுத்திரத்திற்கும் செல்ல வேண்டும்'' என்றான்.

அசோகனும் ''நண்பர்களே! நீங்கள் செய்யும் இந்த உதவியை நான் என்றென்றும் மறக்க மாட்டேன். என் பாட்டனார் நிறுவிய மகத சாம்ராஜ்யத்தை நான் எப்பாடுபட்டாவது காப்பேன்'' என்றான்.

மன்னர் பிந்துசாரர் இறந்து விட்டார் என்ற செய்தியை ஒரு வீரன் கூறிய போது சுசிம்மன் கோப்பையில் மதுவை விட்டு அருந்திக் கொண்டிருந்தான். அவனுடன் அப்போது கிரேக்க வணிகர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு முன்னிருந்த மேஜை மீது கண்ணைப் பறிக்கும் வைரம் ஒன்று பளபளத்துக் கொண்டிருந்தது.

மரணச் செய்தியைக் கூறிய



வீரனைப் பார்த்து சுசிம்மன் ''யார் உன்னை இங்கே உள்ளே விட்டது? நான் அரசாங்க விஷயமாய்ப் பேசிக் கொண்டிருக்கிறேன் என்பது தெரிய வில்லை?'' என்று கோபத்தோடு கேட்டான். அப்போது அவனது அந்த ரங்கக் காவலாளி சுபாகு ''பிரபு! நான் தான் அவனைத் தங்களது அனுமதி முன்பே கேட்டுவிட்டு உள்ளே விட் டேன். பாடலிபுத்திரத்திலிருந்து முக் கிய அவசரச் செய்தியைக் கொண்டு வந்தவன் இவன்'' என அவனுக்கு நினைவூட்டினான்.

அப்போது சுசிம்மனின் போதை தெளிந்து விட்டது. அவன் செய்தி கொண்டு வந்த வீரனை உற்றுப் பார்த்த வாறே ''நீ சொல்வது உண்மையா? என் தந்தை இறந்து விட்டாரா?'' என்று கேட்டான். அந்த வீரனும் ''ஆம் பிரபுவே! இதோ தங்களுக்கு முதல மைச்சர் எழுதியுள்ள கடிதம்'' என்று கூறினான். சுசிம்மனும் ''அந்தக் கிழட்டுப் பயல் கல்லாடகனா? நான் மன்னனானதும் முதல் வேலையாக அவனுக்குச் சீட்டுக் கிழிக்க வேண் டும்'' என்று கூறி விட்டு கிரேக்க வணி கர்களிடம் ''நாம் அப்புறம் சாவகாச மாக சந்தித்துப் பேசலாம்'' என்றான்.

இரு வணிகர்களும் மேஜை மீது தாம் வைத்த வைரத்தைப் பார்த்தார் கள் அவர்கள் தாம் தட்சசீலத்தில் வியாபாரம் செய்ய விசேஷ உரிமை கேட்டுப் பெறவே வந்திருந்தார்கள். அதற்காக சுசிம்மன் மனம் குளிரச் செய்ய அந்த வைரத்தைப் பரிசாக அளிக்க எடுத்து வந்திருந்தார்கள். ஆனால் அதற்கான அனுமதி இன்ன மும் கிடைக்காததால் வைரத்தை எடுத் துக் கொண்டு விடுவதா அல்லது வேண்டாமா என்று தயங்கினார்கள்.

அப்போது சுசிம்மனே. அந்த வைரத்தை தன் கையில் எடுத்துக் கொண்டு ''இது போல இன்னும் சில வைரங்களோடு வந்து என்னைப் பாடலிபுத்திரத்தில் பாருங்கள். உங் களுக்கு இந்த தட்ச சீலத்தில் மட்டு மல்ல, மகதம் முழுவதிலும் வியா பாரம் செய்ய விசேஷ அனுமதி அளிக் கிறேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான். அவர்களும் ''ஓ! நீங்கள் எந்த இடையூறும் இல்லாமல் மகத சிம்மாசனத்தில் அமர வாழ்த்துகி றோம்'' என்று கூறி அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

அவர்கள் சென்ற பின் சுசிம்மன் சுபாகுவிடம் ''இனி நான் பாடலி புத்திரத்திற்குக் கிளம்பத் தயாராக

வேண்டும். இது பற்றி நீ என்ன சொல்கிறாய்? என்று கேட்டான். சுபாகுவும் ''நீங்கள் படையுடன் அங்கு செல்லவே வேண்டும்'' என்றான்.

அப்போது இரைக்க இரைக்க ஒருவன் அங்கு வேகமாக வந்து நின்று ''ஆம் பிரபுவே! சுபாகு சொல்வது சரிதான்'' என்றான். அவன்தான் ஒற்றர் படைத்தலைவன். சுசிம்மன் அவனை ஆச்சரியத்துடன் பார்த்து ''ஏன் அப்படிக் கூறுகிறாய்?'' என்று கேட்டான். ஒற்றர் தலைவனும் நான் பாடலிபுத்திரத்தில் இருந்து நேராக இங்கே வந்திருக்கிறேன். அசோகன் வெகு விரைவில் பாடலிபுத்திரத்தை வந்தடையப் போகிறானாம்'' என்றான்.



அது கேட்டு சுசிம்மன் ''என்ன உளறுகிறாய்? அசோகன்தான் படுக்கையை விட்டு எழுந்திருக்கக் கூட முடியாமல் முடங்கிக் கிடக்கிறானே. அவன் உஜ்ஜயினியை விட்டு நகரக் கூட முடியாமல் இருக்கிறானே'' என்றான். ஒற்றர்தலைவனோ ''பிரபுவே! எனக்குக் கிடைத்த தகவல்படி அவன் உஜ்ஜயினியை விட்டுக் கிளம்பி விட்டான். பாடலிபுத்திரத்திற்கு ஒரு படையுடன் வேகமாகச் சென்று கொண்டிருக் கிறான்'' என்றான்.

சுசிம்மன் திகைத்துப் போய் ''இது உண்மையா?'' என்று கேட்டான். ஒற்றர்தலைவனும் ''முற்றிலும் உண்மை. நீங்கள் இப்போதே பாடலிபுத்திரத்திற்கு கிளம்ப வேண்டும். கொஞ்சமும் தாமதிக்கக் கூடாது'' என்றான். சுசிம்மன் சுபாகுவைப் பார்க்கவே அவனும் ''என்ன வேண்டும் பிரபு?'' எனக் கேட்டான்.

சுசிம்மனும் ''உஜ்ஜயினியிலிருந்து வந்த அந்த இரு நடன மாதுகளும் எங்கே? அவர்கள் பெயர்கள் என்ன? மறந்து விட்டேனே'' என்றான். சுபாகுவும் ''யாரைக் கேட்கிறீர்கள்? நேற்றிரவு உங்களைச் சந்தித்தவர்களைப் பற்றித்தானே கேட்கிறீர்கள்?'' என்று கேட்டான். சுசிம்மனும் ''ஆம். அவர்களே. அசோகன் பக்கவாதத்தால் எழுந்திருக்கக் கூட முடியாமல் உஜ்ஜயினியில் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறான் என்று கூறினார்களே'' என்றான். ஒற்றர் தலைவனோ ''அசோகனுக்கு ஒரு வியாதியும் இல்லை. அவன் நலமாகவே இருக்கிறான். இப்போது பாடலிபுத்திரம் நோக்கி படைகளுடன் வந்து கொண்டிருக்கிறான்'' என்றான்.

சுசிம்மனும் ''சுபாகு! அந்தப் பெண்களை அழைத்து வா. இவன்



சொல்வது உண்மையல்ல என்று இப்போதே நிரூபிக்கலாம்'' என்று உறுமினான். சுபாகுவும் ''அவர்கள் இங்கே இல்லையே'' எனவே சுசிம்மனும் ''அவர்கள் தட்சசீலத்தை விட்டுப் போயிருக்க மாட்டார்கள். நன்றாக தேடிப் பாருங்கள்'' என்றான். அச்சமயத்தில் சுசிம்மனால் உஜ்ஜயினிக்கு அனுப்பப்பட்ட ஒற்றன் வந்து அவனை வணங்கி ''பிரபுவே! அசோகன் படைகளோடு பாடலிபுத்திரத்திற்குப் புறப்பட்டு விட்டான். அவன் கிளம்பிய பிறகே நான் அங்கிருந்து கிளம்பி இங்கு வந்தேன்'' என்றான்.

சுசிம்மனும் ''ஓ! அந்தப் பெண்கள் அசோகனைப் பற்றிக் கூறியது எல்லாமே பொய்யா? பிடித்து வாருங்கள் அவர்களை. அவர்களது கழுத்தை நெருக்கிக் கொல்கிறேன்'' என்று கோபம் கொண்டு உறுமினான்.

மாலை நேரம். சூரியன் இன்னமும் மறையவில்லை. பிந்துசாரனின் உடலை நதிக்கரையில் தகனம் செய்ய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. மன்னனின் மற்ற ஆறு மைந்தர்கள் நின்று கொண்டிருந்தார்கள். மூத்த மகன் சுசிம்மனும் அவனுக்கு அடுத்து வயதில் பெரியவனான அசோகனும் அங்கே இருக்கவில்லை. யார் சிதையில் எரியூட்டுவது என்பது பிரச்னையாக இருந்தது. முதலமைச்சரும் ராஜ புரோகிதரும் சேர்ந்து இதற்கு முடிவு எடுக்க வேண்டுமென அரசசபை ஏற்கனவே தீமானித்திருந்தது.

படைத் தலைவன் அப்போது ''இந்த ஆறு பேர்களையும் ஒரே சமயத்தில் சிதையில் நெருப்பை வைக்கும் படிச் சொல்லலாமா?'' என்று கேட்டான். முதலமைச்சரும் ராஜ புரோகிதரிடம் ''எப்போது சிதையில் எரியூட்ட வேண்டும்?'' என்று கேட்டார். அவரும் ''இன்னும் ஒரு மணி நேரம் கழித்து வைக்கலாம்'' என்றார்.

முதலமைச்சரும் ''அசோகன் இன்னும் சற்று நேரத்தில் இங்கு வந்து விடுவான் என்ற தகவல் கிடைத்துள்ளது. சுசிம்மன் இன்னமும் தட்சசீலத்தை விட்டுக் கிளம்பக்கூட இல்லை. அதனால் அசோகன் வந்ததும் அவனையே கொள்ளி வைக்கச் செய்யலாம். அவன் தான் இங்குள்ள பிந்துசாரனின் மகன்களில் மூத்தவன்'' என்றார். புரோகிதரும் ''அது சரியே'' என்று கூறும் போதே சிலர் ''அதோ, அசோகன் வந்து விட்டான்'' என்று உரக்கக் கூறினார்கள்.

மறு நிமிடமே அதுவரை அங்கே

நின்று கொண்டிருந்த பிந்துசாரனின் மற்ற ஆறு மகன்களும அங்கிருந்து ஓடி விட்டார்கள். அவர்கள் எதிர் பார்த்தபடி சுசிம்மன் வராமல் போனதும், அசோகன் வந்ததும் ஆத்திரத்தை மூட்டியது. அதனால் தம் ஆட்களைத் திரட்டிக் கொண்டு அசோகனைத் தடுத்து நிறுத்த முயன்றார்கள். இதைக் கண்ட பிரமுகர் ஒருவர் ''யாரோ சில்ர் அசோகனை இங்கே வரவிடாமல் தடுத்துத் தாக்கிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று உரக்கக் கூவினார். அதைக் கேட்ட சேனாதிபதி ''அசோகனை இங்கு வரவிடாமல தடுப்பவர்கள் யாராக இருந்தாலும் கொன்று தள்ளுங்கள்'' என்று தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான்.

முதலமைச்சரும் ''இது சுசிம்மனும் அவனது சகோதரர்களும் சேர்ந்து போட்ட திட்டம் என்று தெரிகிறது. ஆனாலும் இது வெற்றி பெறாதென நினைக்கிறேன் ஏனெனில் அசோகனும் தனியாக வரவில்லை என்றும் தன் படையோடு வந்து கொண்டிருக்கிறான் என்று தகவல் கிடைத்துள்ளது'' என்றார். இதே சமயம் அசோகனும் அங்கு வந்து சேர்ந்தான்.

ராஜபுரோகிதரும் ''வா அசோகா. உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். நீ உன் தந்தையின் சிதையில் நெருப்பை மூட்டு'' எனக்கூறி எரியும் கட்டை ஒன்றைக் கொடுக்க அசோகனும் சிதைக்கு எரியூட்டினான். அதன் பின் நடக்க வேண்டிய ஈமச்சடங்குகள் நடந்தேறின.

முதலமைச்சரும் ''அசோகா! நீ தான் உன் தந்தைக்குக் கொள்ளி போட்டாய். அதனால் மகதத்தின் மன்னனாகும் உரிமை உனக்குத்தான். இன்றிரவே நீ ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள். விரைவில் ஒரு நல்ல முகூர்த்தத்தில் பட்டாபிஷேகத்தையும் நடத்தலாம்'' என்றார். அசோகனும் ''நான் மன்னனாவது எல்லோருக்கும் சம்மதம்தானே?'' என்று கேட்க முதலமைச்சரும் ''ஆமாம். எல்லோருக்கும் சம்மதமே'' என்று கூறினார்.

அசோகனை வழி மறித்துத் தாக்க முயன்றவர்களெல்லாம் படை வீரர்களால் கொல்லப்பட்டார்கள். அவர்களில் ஆறு அரசகுமாரர்களும் இருந்தனர். அரசகுமாரர்கள் இறந்ததால் அந்தப் புரமும் துயரத்தில் மூழ்கியது.

**(தொடரும்)**





# உண்மையான சீடன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்தப் பயங்கர நடுராத்திரியில் நீ இங்கே வந்து ஏன் இப்படிச் சிரமப்படுகிறாய்? உனக்குக் கல்வியளித்த குரு ஏதாவது விசித்திர மான குருதட்சிணை செலுத்தும்படிக் கூறினாரா? அதைச் செலுத்தத்தான் இப்படிப் பாடுபடுகிறாயா? உனக்கு சதானந்தர் என்பவர் தம் இரு சீடர் களிடம் கேட்ட குருதட்சிணை பற்றிய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்லத் தொடங்கியது.

ஒரு காலத்தில் கடம்பவனத்தில் சதானந்தர் என்ற மகான் குரு குலத்தை நடத்தி அதில் சேர வரும் மாணவர்

## வேதாளம் சொல்லும் கதை



களுக்கு அவர்களது விருப்பப்படி கல்வி அளித்து வந்தார். அந்த சீடர்கள் தாம் போதிய அறிவைப் பெற்றதும் தாமாகவே அந்த குருகுலத்தை விட்டுச் சென்று விடுவார்கள். அவர்களிடம் குருதட்சிணையாக சதானந்தர் எதையும் தனியாக பெறாமல் குரு குலத்தில் இருக்கும் போது அவர்களைக் கடினமாக உழைக்க வைத்து வேலை வாங்கி வந்தார். அவர் அளிக்கும் கல்வி உயர் தரமானதாக இருந்தது. ஆனால் குருகுலத்தில் கடினமான வேலை செய்ய பயந்து குருகுலத்தில் பலர் சேரத் தயங்கினர்.

ஒருமுறை அவரது குருகுலத்தில் சேர முகுந்தன் என்றும் ஜெயந்தன் என்றும் இரு குடியானவ இளைஞர்கள் வந்து சதானந்தரிடம் தாம் வைத்திய சாஸ்திரம் கற்க விரும்புவதாகக் கூறினார்கள். அவர்களை சதானந்தர் தம் குருகுலத்தில் சேர்த்துக் கொண்டார். குரு குல விதிகளின் படி நடந்து அவர்கள் மூன்றே மாதங்களில் தாம் கற்க வேண்டியதை யெல்லாம் கற்று விட்டார்கள். அதனால் அவர்கள் சதானந்தரிடம் ''குருவே! நாங்கள் தொழில் செய்வதற்கான அறிவைப் பெற்று விட்டோம். அதற்காக நாங்கள் குரு குலத்திற்கு எங்கள் உழைப்பை அளித்தது மிகக் குறைவான குருதட்சிணை என நினைக்கிறோம். எனவே நாங்கள் எவ்வளவு குருதட்சிணையாகக் கொடுக்க வேண்டுமென்று கூறினால் அதைச் செலுத்தி விடுகிறோம்'' என்று பணிவுடன் கூறினார்கள்.

சதானந்தரும் சிரித்துக் கொண்டே ''நான் இதுவரை எந்த சீடனிடமும் குருதட்சிணை கேட்டு வாங்கியது இல்லை. ஆனால் நீங்களாக விரும்பிக் கொடுப்பதாகக் கூறுகிறீர்கள். அதனால் இன்றைக்கு ஒரு வருடத்திற்கு பிறகு உங்களைக் காண வருவேன். அப்போது நீங்கள் ஒவ்வொருவரும் எனக்கு ஒரு லட்சம் வராகன்கள் குருதட்சிணையாகக் கொடுக்க வேண்டும்'' என்றார்.

அது கேட்டு அவர்கள் அவ்வளவு பெரிய தொகையை எப்படிச் சம்பாதித்துக் கொடுப்பது என்று எண்ணித் திகைத்தாலும் தம் குரு கேட்ட தட்சிணையைக் கொடுப்பதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டு அவர்கள் தத்தம் ஊர்களுக்குப் போனார்கள்.

முகுந்தன் தன் ஊரிலிருந்த வைத்தியர் வைத்தியலிங்கத்திடம் போய் ''ஐயா! நான் சதானந்தரின் குருகுலத்தில் இருந்து வைத்திய சாஸ்திரம்

கற்றவன் இவ்வூரில் வைத்தியத் தொழிலை செய்ய விரும்புகிறேன். இதற்கு நீங்கள் உதவ வேண்டும். வேண்டுமானால் நாம் இருவரும் சேர்ந்து வைத்தியசாலையை நடத்தலாம். கிடைக்கும் வருமானத்தில் ஆளுக்குப் பாதி எடுத்துக் கொள்ளலாம். எனக்கு நிறையப் பணம் தேவைப்படுகிறது'' என்று கூறி சதானந்தருக்குதான் குரு தட்சிணையாக ஒரு லட்சம் வராகன்கள் கொடுக்க வேண்டி இருப்பதைக் கூறினான்.

வைத்தியலிங்கமும் ''இதோ பார் நீ சதானந்தரின் சீடன் எனக் கூறித் தொழில்ஆரம்பித்தாலே எல்லோரும் உன்னிடம் சிகிச்சை பெற வருவார்கள். இப்போது என்னிடம் வரும் நோயாளிகள் மிகக் குறைவே. அதனால் நாம் கூட்டாகத் தொழில் செய்தால் உனக்குத்தான் நஷ்டம். எனவே எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீ என் மகளை மணந்து கொண்டு என் மாப்பிள்ளையாகி விடு. நாம் ஒரே குடும்பமாக இருந்து தொழில் நடத்துவோம். நம் வைத்தியசாலையில் சதானந்தரின் பெரிய உருவப் படத்தை வைத்து அதற்கு மாலையிட்டு மரியாதை காட்டுவோம். இதனால் நீ சதூானந்தரின் சீடன் என்பது எல்லோருக்கும் தெரிந்து விடும். அதனால் சுற்றுப் பக்கத்து ஊர்களிலிருந்து எல்லோரும் உன்னிடமே வைத்தியம் செய்து கொள்ள வருவார்கள். நாமும் கட்டணமாகப் பெருந் தொகையைக் கூறி அவர்களிடமிருந்து வசூலித்து விடலாம்'' என்றான்.

முகுந்தனும் அதற்கு இணங்கி



வைத்தியலிங்கத்தின் மகளை மணந்து கொண்டான். அதன் பின் தன் ஊரான சிவகிரியில் ஒரு வைத்திய சாலையை ஆரம்பித்தான். அதில் சதானந்தரின் பெரிய உருவப் படத்தை வைத்து அதற்கு தினமும் மாலை போட்டு வணங்கி வரலானான். அவனது பெயரும் சதானந்தரின் சீடன் என்று பரவியது. ஏராளமான நோயாளிகள் அவனிடம் சிகிச்சை பெற வந்தனர். அவனும் நோயை குணப்படுத்தியும் நல்ல மருந்துகளைக் கொடுத்தும் பெருந் தொகையைக் கட்டணமாக வசூலித்து வந்தான். இதனால் ஆறு மாதகாலத்துள்ளேயே அவனிடம் இரண்டு லட்சம் வராகன்களுக்கு மேல் சேர்ந்து விட்டது.

குரு குலத்தை விட்டுச் சென்ற ஜெயந்தன் தன் ஊரான சங்ககிரியை



அடைந்தான். அவ்வூர் மக்கள் எந்த நோய்க்கும் வைத்தியரை நம்புவதை விட அவ்வூர் மாந்திரீகனான மணி கண்டன் என்பவனையே நம்பினார் கள். அவன் மந்திரம் போட்டு திருநீறு கொடுத்தால் எந்த வியாதியும் பறந்து போய் விடும் என்பது அவ்வூராரின் நம்பிக்கை. மணிகண்டன் அவர்களது மூட நம்பிக்கையைப் பயன்படுத் திக் கொண்டு பணம் சம்பாதித்து வந்தான்.

ஒருநாள் கோபாலன் என்ற சிறுவ னுக்குக் கடும் காய்ச்சல் கண்டது. அவனது பெற்றோர் ஜெயந்தனின் அடுத்த வீட்டில் வசித்து வந்தார்கள். கோபாலனின் காய்ச்சலைத்தான் குணப்படுத்துவதாக ஜெயந்தன் கூறி யும் அச் சிறுவனின் தந்தை ''மந் திரக்காரர் மணிகண்டன் மந்திரித்து விபூதி கொடுத்தால் காய்ச்சல் பறந்து போய் விடும்'' என்று கூறித் தன் மகனை மணிகண்டனிடம் கொண்டு போனான்.

இரண்டு நாட்கள் மணிகண்டன் மந்திரம் போட்டும் கோபாலனின் காய்ச்சல்சற்றும் குறையாததோடு அதி கரித்தும் விட்டது. இதைக் கண்ட ஜெயந்தன் மணிகண்டனைக் கண்டு ''என்னய்யா! இந்த மாதிரிச் செய் கிறாய்? இரண்டு நாட்களாக பையன் கோபாலனை உன்னிடம் கொண்டு வந்து காட்டி மந்திரித்துக் கொண்டு போகிறார்கள். ஆனால் அச்சிறுவ னின் காய்ச்சல் குறையாமல் அதிகரித் துக் கொண்டிருக்கிறது. உன் மந்திர சக்தியால் எந்த நோயும் போய் விடாது என்பது எனக்கு நன்கு தெரியும். உண்மையைச் சொல் உன் மந்திரத் தால் நோய்கள் மறைந்து விடுகின்ற னவா?'' என்று கேட்டான்.

மணிகண்டனும் ''தம்பி! நீ வைத்தி யம் கற்றவன். அதனால் காய்ச்சல் பற் றித் தெரிகிறது. உன்னால் மருந்து கொடுத்து காய்ச்சலைப் போக்கி விட முடியும். ஆனால்இந்த ஊர்க்காரர்கள் மருந்தைவிட மந்திர சக்தியைத்தான் அதிகமாக நம்புகிறார்கள். அதனால் தான் என்னிடம் வருகிறார்கள். எந்த வியாதியானாலும் என் மந்திரம் போக்கி விடுமென நம்புகிறார்கள். நானும் அவர்களது நம்பிக்கையைக் கெடுக்க வேண்டாம் என்று எண்ணி மந்திரித்து திருநீறு கொடுக்கிறேன். நோயை குணப்படுத்தும் சக்தி எனக்கு இல்லை. இப்படிச் செய்வது எனக்கே மனச்சங்கடமாகத்தான் உள்ளது. இதி லிருந்து தப்ப முடியாமல் தத்தளிக்

கிறேன்'' என்றான்.

ஜெயந்தனும் ''நீ உண்மையிலேயே நல்லவன் என்றும் மக்களை ஏமாற்ற விரும்பாதவன் என்றும் தெரிகிறது. மக்களின் மூட நம்பிக்கைகளை திடீரென நம்மால் போக்கி விட முடியாது. நீயும் மக்களின் நோய்களைப் போக்க முயன்று வருகிறாய். ஆனால் உன்னிடம் அந்த சக்தி இல்லை. நான் வைத்தியம் கற்றவன். என்னால் மருந்து கொடுத்து நோய்களை குணப்படுத்த முடியும். நம் இருவரின் நோக்கமும் ஒன்றுதான். அதனால் நாம் இருவரும் சேர்ந்து மக்களுக்குப் பணி புரிவோம். நான் ஒரு வைத்தியன் என்றும் இன்னாருடைய சீடன் என்றும் யாரிடமும் சொல்லிக் கொள்ள மாட்டேன். மக்கள் எப்போதும் போல உன் மந்திரசக்தியை நம்பி உன்னிடம் வரட்டும். நாம் இருவரும் நோயாளிகளைப் பார்த்து உன் திருநீறுடன் என் மருந்தையும் சேர்த்துக் கொடுக்கலாம். கிடைக்கும் வருமானத்தில் ஆளுக்குப் பாதி எடுத்துக் கொள்ளலாம். நமக்கும் மன நிறைவு ஏற்படும்'' என்றான்.

மணிகண்டனும் ''ஆகா! நீதான் எவ்வளவு உயர்ந்த உள்ளம் கொண்டவன்! நாம் இருவரும் சேர்ந்தே மக்களுக்குப் பணிபுரிவோம். உன்னை ஒரு வைத்தியன் என்றோ சதானந்தரின் சீடன் என்றோ யாரிடமும் நான் கூற மாட்டேன்! நீ கூறியபடி நமக்குக் கிடைக்கும் வருமானத்தில் ஆளுக்குப் பாதி எடுத்துக் கொள்ளலாம்'' என்றான். ஜெயந்தனும் அந்த ஏற்பாட்டின்படி மணிகண்டனுடன் சேர்ந்து பணி புரியலானான். மணிகண்டனுடன் புதி



தாக ஜெயந்தன் என்ற மாந்திரீகன் சேர்ந்திருக்கிறான் என்றே மக்கள் எண்ணினார்கள். நாளுக்கு நாள் மணிகண்டனின் வருமானம் அதிகரித்தது. ஆறு மாத காலத்தில் இரண்டு லட்ச வராகன்கள் வருமானம் அவர்களுக்குக் கிடைத்தது.

ஜெயந்தன் தன் குருவிற்கு குருதட்சிணை கொடுக்க வேண்டுமே என்று சற்றும் கவலைப்படவில்லை. ஏனெனில் குருதட்சிணையை அவன் சதானந்தருக்குக் கொடுத்தால் அவன் அவரது சீடன் என்பது எல்லோருக்கும் தெரிந்து போய் விடுமே! சங்ககிரியில் அவனை எல்லோரும் ஒரு மாந்திரீகன் என்றுதான் அறிந்திருந்தனர். அவன் ஒரு வைத்தியன் என்று யாருக்குமே தெரியவில்லைதான்!

இப்படியாக ஒரு வருட காலம்

கழிந்தது. சதானந்தர் தம் இரு சீடர்களான ஜெயந்தனையும் முகுந்தனையும் குருதட்சிணை விஷயமாகப் பார்த்து வரலாமென எண்ணித் தம் குருகுலத்திலிருந்து கிளம்பினார். முதலில் அவர் ஜெயந்தனின் ஊரான சங்ககிரிக்குச் சென்றார். அங்கு அவர் பலரிடமும் வைத்தியர் ஜெயந்தன் இருக்கிறாரா என்று கேட்கவே எல்லோருமே ''அப்படி ஒரு வைத்தியர் இந்த ஊரில் கிடையாது. இவ்வூர் மாந்திரீகன் மணிகண்டனோடு மாந்திரீகன் ஜெயந்தன் என்பவன் இருக்கிறான். இந்த இரு மாந்திரீகர்களும் சேர்ந்து கொண்டு நோய்களை மந்திரத்தால் குணப்படுத்தி விடுகிறார்கள். பணம் நிறையக் கொடுத்தாலும் நோய்கள் குணமாகி விடுகின்றன'' என்றார்கள்.

இதையெல்லாம் கேட்டு விட்டு சதானந்தர் ஜெயந்தனின் வீட்டிற்குச் சென்றார். அவர் வருவதைக் கண்ட ஜெயந்தன் வீட்டிற்குள் ஒளிந்து கொண்டு தன்னைப் பற்றி அவர் கேட்டால் தான் வீட்டில் இல்லை என்று சொல்லி அனுப்பி விடும்படித் தன் வீட்டாரிடம் சொல்லி வைத்தான். சதானந்தரும் ஜெயந்தனின் வீட்டு வாசலில் நின்று ஜெயந்தன் இருக்கிறானா என்று கேட்கவே, வீட்டில் இருந்தவர்கள் ''இல்லையே. அவர் ஏதோ வேலையாக வெளியூர் போயிருக்கிறார்'' என்று கூறினார்கள். அது கேட்டு அவரும் சிரித்துக் கொண்டே அங்கிருந்து சென்றார்.

அடுத்து அவர் முகுந்தன் இருக்கும் சிவகிரிக்குச் சென்றார். அங்கு முதலில் சந்தித்தவனிடம் அவர் முகுந்தனை பற்றிக் கேட்டதும் அவன் ''ஓ! முகுந்த வைத்தியரா! அந்த மூன்றடுக்கு மாடி வீடுதான் அவருடையது'' எனவே அவரும் அந்தப் பெரிய வீட்டிற்குச் சென்றார். அவரைக் கண்டதுமே முகுந்தன் ஓடோடி வந்து அவரை



வணங்கி ''குருவே! வர வேண்டும். தங்கள் வருகையைத்தான் எதிர்பார்த் துக் கொண்டிருந்தேன். தங்களுக்குச் செலுத்த வேண்டிய குருதட்சிணை ஒரு லட்சம் வராகனை தயாராக ஆறு மாதத்திற்கு முன்பே எடுத்து வைத்தி ருக்கிறேன் தாங்கள் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று மிகவும் பணிவுடன் கூறினான்.

சதானந்தா அந்த குருதட் சிணையை வாங்காமல் ''முகுந்தா! ஒரு வைத்தியன் ஆறு மாத காலத் திற்குள் பெரிய தொகையான ஒரு லட்சம் வராகனைச் சம்பாதித்திருக் கிறான் என்றால் அவன் நோயாளி களைக் கசக்கிப் பிழிந்து பணத்தை வாங்கி இருக்க வேண்டும். இப்படிக் கொள்ளையடித்தது போல நீ சேர்த்த பணத்தை நான் வாங்கி கொள்ளவே மாட்டேன். வைத்தியன் நோயாளிக்கு மருந்து கொடுத்து நோயைப் போக்கு வதைத் தன் கடமையாகக் கொள்ள வேண்டும். ஆனால் இதை நீ உணர்ந்த தாகத் தெரியவில்லை. விரைவி லேயே நீ இதை உணர்ந்து செயல்படு வாயென்று நான் எதிர் பார்க்கிறேன். இன்னொரு விஷயத்தைக் கூறுகி றேன். நீயும் ஜெயந்தனும் என் குரு குலத்தை விட்டு வெளியேறியது முதல் நான் உங்கள் நடவடிக்கைகளை கவனித்துக் கொண்டு வந்தேன். நீ இப்படி பணத்தாசையால் உன் கட மையை மறந்து விட்டாய். எனவே நீ சம்பாதித்த பணத்திலிருந்து ஒரு காசு கூட வாங்கிக் கொள்ள மாட்டேன் இனிமேலாவது பணத்தாசை கொள் ளாமலும் நோயாளிகள் கொடுத்த பணத்தை வாங்கிக் கொண்டு அவர்



களுக்கு சிகிச்சை அளித்து வா'' எனக் கூறிவிட்டுத் தம் குருகுலத்திற்குத் திரும்பிச் சென்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னா! குருதட்சிணை எதுவுமே வாங்காத சதானந்தர் முகந்தனிட மும் ஜெயந்தினிடமும் மட்டும் அவர்கள் ஒவ்வொருவரும் லட்சம் வராகன்கள் குரு தட்சிணையாக ஒரு வருடம் கழித்துக் கொடுக்க வேண்டு மெனக் கூறினாரே. இது எப்படி நியாயமாகும்? வைத்தியன் ஒருவ னால் ஒரு வருடத்துள் அப்படி ஒரு பெருந் தொகையை நியாயமான முறையில் சம்பாதிக்க முடியாது தானே. அப்படி இருந்தும் அவர் தம் சீடர்களிடம் அந்த தட்சணையைக் கேட்டது ஏன்? இதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கத்தான் வேண்டும். நீ

அக்காரணத்தை அறிந்திருந்தும் கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்று கூறியது. விக்கிரமனும் ''உலகில் மனிதர்களின் நடத்தையைக்கண்டால்பலவிதமாறு தல்களைக் காணலாம். வைத்திய னாகத் தொழில் புரிய வேண்டிய முகுந்தன் பணத்தாசை கொண்டு உள்ளூர் வைத்தியனைக் கண்டான். அவனோ முகுந்தனைத் தன் மாப் பிள்ளையாக்கிக் கொண்டு அவன் மனதில் பணத்தாசையைக் கிளப்பி விட்டான். அது வளர்ந்து நோயாளி களைக் கசக்கிப் பிழிந்து ஆறே மாதத் தில் லட்சம் வராகன்களைச் சம்பா தித்து விட் டான். இது வைத்திய தர் மத்திற்கு முரணானது. வைத்தியன் மருந்து கொடுத்து நியாயமாய் நோயா ளிகள் கொடுக்கும் பணத்தோடு திருப்தி அடைய வேண்டும். இவ் வாறு முகுந்தன் நடந்து கொள்ளாத தால் அவர் அவன் அளிக்க வந்த குருதட்சிணையை ஏற்க மறுத்தார். ஜெயந்தனை அவர் மனதுள் பாராட்டி னார். ஏனெனில் அவன் தன்னை முகுந்தனைப் போல சதானந்தரின் சீடன் என்று பறை சாற்றிக் கொள்ள வில்லை. மாறாக அவன் தான் இன் னாருடைய சீடன் என்று சொல்லிக் கொள்ளாமல் மக்க ளுக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற நோக்கத்து டன் மாந்திரீகனுடன் மாந்திரீகனாகி நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்து மருந்துகளையும் கொடுத்து வந்தான். அவன் குரு தட்சிணையைக் கொடுக் கவில்லை என்பதற்கு அவன் சதா னந்தருடைய சீடன் என்று பிறர் அறி யக் கூடாது என்று எண்ணியதே கார ணம். அதனால்தான் சதானந்தரும் அவனைச் சந்திக்காமலும் குரு தட் சிணை வாங்கிக் கொள்ளாமலும் சென்று விட்டார். சதானந்தன் இவர் களிடம் பெருந்தொகையை தட்சி ணையாகக் கேட்டது. இருவரில் யார் உண்மையில் வைத்தியனாக இருந்து மக்களுக்குப் பணிபுரிகிறார் எனக் காணத்தான். அவரது இரு சீடர்களில் ஜெயந்தனே உயர்ந்த சீடன்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்த வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# கல்கத்தா

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




மேற்கு வங்கத்தின் தலைநகரான கல்கத்தா இந்தியாவின் இரண்டாவது பெரிய நகரம். இது இந்த நூற்றாண்டின் ஆரம்பம் வரை ஆங்கிலேயர்களின் தலைநகரமாக இருந்தது. தற்போது இங்குள்ள தலைமை அஞ்சலக இடத்தில்தான் ஆங்கிலேயர்கள் தம் முதலாவது கோட்டையைக் கட்டினார்கள். அதை வங்காள நவாப் சிராஜ் உத்தௌலா 1756ல் அழித்தார். அப்போதுதான் கல்கத்தா இருட்டறை சம்பவம் நடந்தது. 6மீ நீளமும் 4 மீ அகலமுள்ள ஒரு சிறு அறைக்குள் 123 ஆங்கில வீரர்கள் அடைக்கப்பட்டனராம். அவர்கள் மூச்சுத் திணறி இறந்து போயினராம். இதைக் குறிக்கும் விதத்தில் ஒரு கருப்பு பளிங்குக் கல் இந்த அஞ்சலகத்தின் ஒரு மூலையில் உள்ளது.

கோவிந்தபூரில் ஆங்கிலேயர்கள் மிகப் பலமான ஒரு கோட்டையைக் கட்டி அதற்கு வில்லியம் கோட்டை என்று பெயரிட்டார்கள். இந்தக் கோட்டை யாராலும் தாக்கப்படவும் இல்லை. இங்கிருந்து ஒரு குண்டு கூட வெடிக்கப் படவில்லை. இங்கிருந்த காட்டுப் பகுதி அழிக்கப்பட்டு மிகப் பெரிய திறந்த வெளியாக்கப்பட்டது இப்பகுதியை 'மைதான்' என்று கூறுகிறார்கள். இந்த மைதானில்தான் கிரிக்கெட் பந்தயங்கள் நடக்கும் 'ஈடன் கார்டன்' உள்ளது. இங்குதான் இந்தியாவின் முதல் கிரிக்கட் கிளப்பான கல்கத்தா கிரிக்கட் கிளப் 1792ல் ஆரம்பிக்கப் பட்டது. மற்றும் ராயல் கல்கத்தா கோல்ஃப் க்ளப், மோகன் பகான் புட்பால் க்ளப், ராயல் கல்கத்தா குதிரைப் பந்தயக் கிளப் ஆகியவை இந்த மைதானத்தில் உள்ளன.



ஈடன் கார்டன்

## கல்கத்தாவின்



சௌரங்கி தெரு

தற்போது ஜவாஹர் லால் நேரு சாலை என உள்ள சௌரங்கி தெரு தான் இந்தியாவின் பெட்ரோமாக்ஸ் விளக்குகளைக் கொண்ட முதலாவது கடைத் தெரு இது 1859ல் அமைக்கப் பட்ட நாற்பது ஆண்டுகளுக்குப் பின் இந்தியாவில் முதன் முதலாக மின் விளக்குகளைப் பெற்ற நகரம் என்ற பெருமையைக் கல்கத்தா பெற்றது.

நியாகிகள் கோபுரம்

விக்டோரியா நினைவகம் என்பதனைக் கட்ட 15 ஆண்டுகள் பிடித்தன. 1921ல் கட்டி முடிக்கப்பட்ட இது 1901ல் இறந்த விக்டோரியா மகாராணியின் நினைவாகக் கட்டப் பட்டது. இதற்கான வெள்ளைச் சலவைக் கற்கள் ராஜஸ்தானத்திலிருந்து கொண்டு வரப்பட்டன. ▶



விக்டோரியா நி

இந்தியாவின் முதலாவது சுரங்க புற நகர் ரயில் 16 கி.மீட்டருக்கு டாலிகஞ்சிலிருந்து டம்டம் வரை விடப்பட்டது.

▼

சுரங்க புற நகர் ரயில்



காளி தேவி கல்கத்தாவின் பெரும் பாலானோர் வணங்கும் தெய்வம். காளி கோவிலுக்கு அருகிலுள்ள காளி கட்டத்தில் அன்னை தெரஸா ஆரம்பித்த நிர்மல் ஹிருதய் உள்ளது. இதன் சேவகிகள் நீலக் கரை கொண்ட வெள்ளைப் புடவைகளை உடுத்திக் கொண்டு பல இடங்களில் நற்பணி புரிகிறார்கள். அனாதை விடுதிகள், மருத்துவமனைகள் போன்றவற்றில் இவர்களைக் காணலாம்.

## காட்சிகள்

தியாகிகள் கோபுரம் 46மீ. உயரமானது. முன்னர் இதன் பெயர் ஓச்டர் லோனி நினைவகம் என்பதாம். 1828ல் கட்டப்பட்ட இது கிழக்கிந்தியக் கம்பெனி படைகளை நேபாளத்தைத் தாக்கக் கொண்டு சென்ற சர் டேவிட் ஓச்டர் லோனியின் நினைவில் கட்டப்பட்டது இதில் 223 படிகள் உள்ளன.

சிகந்தராவிலுள்ள அக்பரின் கல்லறையைப் போல நகோடா மசூதி 1926ல் கட்டப்பட்டது. இது இந் நகரின் மிகப் பெரிய மசூதி. இதில் ஒரே சமயத்தில் பத்தாயிரம் பேர்கள் அமர்ந்து தொழுகை நடத்த முடியும்.



நகோடா மசூதி





கம்



ரைட்டர்ஸ் பில்டிங் என்பதில் மேற்கு வங்க அரசின் தலைமைச் செயலகம் இயங்குகிறது. இங்கு முன்பு கிழக்கிந்திய கம்பெனியின் குமாஸ்தாக்கள் பணிபுரிந்து வந்தனர். இது 1880ல் புதுப்பிக்கப்பட்டது.

அன்னை தெரசா



ரைட்டர்ஸ் பில்டிங்



ஜோரசன் கோவிலுள்ள தாகூரின் இல்லம்

ஜோரஸன்கோ இல்லத்தில் தான் கவியரசர் ரவீந்திரநாத் தாகூர் பிறந்தார். வட கல்கத்தாவிலுள்ள இதே இல்லத்தில்தான் அவர் இறந்தார். குருதேவர் என மரியாதையுடன் அழைக்கப்படும் இவருக்கு 1913ல் நோபல் பரிசு இவர் எழுதிய நூலான கீதாஞ்சலிக்காக அளிக்கப்பட்டது. கல்கத்தாவாசிகள் இலக்கியப் பிரியர்கள் அதனால் தாகூருக்கு இந்தப் பரிசு கிடைத்ததில் அவர்கள் பெருமைப்படுகிறார்கள்.

அலிப்பூரிலுள்ள தேசிய புத்தகாலயம் நம் நாட்டிலேயே மிகப் பெரியது. இதில் 51 கி.மீ நீள எஃகு அறைகளில் 20 லட்சம் புத்தகங்களும் கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன. ஆசுதோஷ் முகர்ஜி சேகரித்த ஏராளமான புத்தகங்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

கல்கத்தாவின் மற்றொரு புகழ் பெற்ற கட்டடம் சலவைக் கல் மாளிகை. இதை ராஜா ராஜேந்திர மல்லிக் என்ற பெரும் பணக்காரர் கட்டி இதில் பல அபூர்வப் பொருள்களை வைத்திருக்கிறார். சிலைகள், ஓவியங்கள், மற்றும் பல் சுவையம்சப் பொருள்களைக் காணலாம். இந்த ராஜாவின் சந்ததியினர் இன்றும் ஏழைகளுக்கு மத்தியான வேளையில் அன்ன தானம் செய்து வருகிறார்கள்.

சலவைக் கல் மாளிகை





# கிழவனின் பதிலடி!

பாசூரில் ஆறுமுகம் என்ற கிழவன் தன் கிழ மனைவி சொக்கியுடன் வாழ்ந்து வந்தான். ஒரு முறை அவன் தன் பசுவை மோசூர் சந்தையில் விற்க நினைத்தான். ஆனால் அவனது கால் சுளுக்கிக் கொண்டு நடக்க முடியாமல் போனதால் தன் மனைவியிடம் ''சொக்கி! நம் பசுவை மோசூர் சந்தைக்கு ஓட்டிப் போய் விற்று வா'' எனக் கூறினான். சொக்கியும் பசுவை ஓட்டிக் கொண்டு மோசூரை நோக்கிச் சென்றாள்.

அவள் அடுத்த சிறு கிராமத்தைக் கடக்கும்போது மூன்று போக்கிரிகள் அவள் பசுவை ஓட்டிக் கொண்டு போவதைக் கண்டார்கள் அந்தப் பசுவைக் குறைந்த விலையில் வாங்கி விடத் திட்டம் போட்டார்கள். அவள் அக்கிராமத்தைக் கடந்ததும் முதலாவது போக்கிரி அவளைக் கண்டு ''என்ன பாட்டீ! ஆட்டை சந்தையில் விற்க ஓட்டிக் கொண்டு போகிறாயா? அவ்வளவு தூரம் நீ போக வேண்டாம். எனக்கு விற்றுவிடு. முப்பது ரூபாய் கொடுக்கிறேன்'' என்றான்.

அது கேட்டு சொக்கி ''உனக்குக் கண் இல்லையா? இது பசு மாடு. ஆடல்ல'' எனவே அந்தப் போக்கிரி ''உனக்குத்தான் பார்வை மங்கி விட்டது. ஆட்டை நீ பசு மாடு என்று நினைத்து ஓட்டிச்செல்கிறாயே'' எனக் கூறி சிரித்துக் கொண்டே போனான். சொக்கி கொஞ்ச தூரம் போனதும் இரண்டாவது போக்கிரி அவள் முன் வந்து ''பாட்டீ! ஆட்டை விற்கவா போய்க் கொண்டிருக்கிறாய்? நான் இதை இருபத்தைந்து ரூபாய்க்கு வாங்கிக் கொள்கிறேன் கொடுக்கிறாயா?'' என்று கேட்டான்.

சொக்கியும் ''நன்றாகப் பார். இது ஆடல்ல, மாடு'' எனவே அந்தப் போக்கிரி ''பாட்டீ; உனக்குத்தான் கண் சரி இல்லை. ஆட்டைப் பசு மாடு என்று எண்ணி ஓட்டி வந்துவிட்டாய்'' என்று

—எஸ். சோபினி—



நான் உனக்கு முப்பது ரூபாயே கொடுத்துவிடுகிறேன். எனக்கே இந்த ஆட்டை விற்றுவிடு'' என்றான். கிழவியும் தான் ஓட்டி வந்தது ஆடு தான் என நினைத்து பசுவை அந்தப் போக்கிரிக்கு முப்பது ரூபாய்க்கு விற்றுவிட்டுத் தன் ஊருக்குத் திரும்பி வந்தாள். அவள் முப்பது ரூபாயைத் தன் கணவனிடம் கொடுத்துவிட்டு நடந்ததைக் கூறினாள்.

ஆறுமுகம் ''ஓ! உன்னை அடுத்த ஊர் மூன்று போக்கிரிகள் ஏமாற்றி விட்டார்கள். அவர்களை நான் அறிவேன். அவர்களுக்குத் தக்க பாடம் கற்பிக்கிறேன்'' என்றான். அவன் உடனே வெளியே போய் ஒரே மாதிரியாக உள்ள இரு முயல்களைப் பிடித்து வந்தான். அவற்றில் ஒன்றை ஒரு கூடையில் போட்டு மறைத்து வைத்துக் கொண்டான். மற்றதை இன்னொரு கூடையில் வைத்து தூக்கிக் கொண்டு தன் ஊரிலிருந்து கிளம்பி மூன்று போக்கிரிகளுள்ள கிராமத்திற்குப் புறப்பட்டான்.

போகுமுன் சொக்கியிடம் அவன் ''நான் அந்தப் போக்கிரிகளை நம் வீட்டிற்கு அழைத்து வரப் போகிறேன். நீ விருந்து சாப்பாடு தயாரித்து வை. நான் வீட்டிற்குள் நுழையும் போதே என்ன சமையல் என்று கேட்பேன். எல்லாம் முயல் சொன்னபடி செய்திருக்கிறேன் என்று கூற வேண்டும்'' என்று கூறிவிட்டே சென்றான்.

ஆறுமுகம் போக்கிரிகளின் கிராமத்தை அடைந்தான். அந்த மூன்று போக்கிரிகளும் அவனைப் பார்த்ததும் அவனிடம் வந்து ''நேற்று உன் மனைவி ஒரு ஆட்டை ஓட்டிக்

கூறி சிரித்துக் கொண்டே சென்றான்.

சொக்கிக்குத் தன்னிடம் இருப்பது பசுவா அல்லது ஆடா என்று சந்தேகம் வந்து விட்டது. அவள் சற்று தூரம் போனதும் மூன்றாவது போக்கிரி அவள் முன் வந்த ''பாட்டீ! ஆட்டைச் சந்தையில் விற்கவா ஓட்டிக் கொண்டு போகிறாய்? நான் இருபது ரூபாய் கொடுக்கிறேன், கொடுத்து விடு'' என்றான். அப்போது சொக்கி ''இந்தப் பசுவைப் பார்த்தவர்களெல்லாம் ஆடு என்கிறார்கள் இது ஆடுதானா? முதலில் இதைப் பார்த்தவன் ஆடு என்று கூறி முப்பது ரூபாய் கொடுப்பதாகக் கூறினான். எனக்கு ஒன்றுமே புரியவில்லை'' என்றாள்.

மூன்றாவது போக்கிரி ''இது ஆடு தான். சந்தேகமே இல்லை. பாவம்! நீ ஏன் சந்தை வரை நடக்க வேண்டும்?

கொண்டு வந்து அதை பசுமாடு என்றாள். இப்படிப்பட்ட முட்டாளுடன் நீ எப்படித்தான் குடித்தனம் நடத்துகிறாயோ?'' என்று கேலி செய்தார்கள்.

ஆறுமுகமும் ''அவள் முட்டாள் என்பது எனக்கும் தெரியும். ஆனால் அவளது சமையல் மிக நன்றாக இருப்பதால் அவளை வீட்டை விட்டு துரத்த எனக்கு மனம் வரவில்லை'' என்றான். அந்தப் போக்கிரிகளும் ''அப்படியா?'' என்று கேட்கவே ஆறுமுகம் ஏதோ யோசிப்பது போல நடித்து ''இன்று அவளிடம் என்ன சமையல் செய்யச் சொல்லலாம்? ஒரு கூட்டு, ஒரு கறி, ஒரு பச்சடி, பாயசம், வடை என்று விருந்து சாப்பாடு தயாரிக்கச் சொல்கிறேன். பால்பூரியும் செய்யச் சொல்கிறேன்'' என்று கூறி தன் கையில் எடுத்து வந்த கூடையிலிருந்து முயலை எடுத்து ''முயலே! நீ போய் சொக்கியிடம் நான் இப்போது சொன்னதை எல்லாம் கூறி விருந்து சாப்பாடு தயாரித்து வைத்திருக்கச் சொல்'' என்று சொல்லி முயலைக் கீழே விடவே அது பாய்ந்து ஓடியது.

மூன்று போக்கிரிகளும் ''ஆச்சரியமாக இருக்கிறதே. இந்த முயல் போய் உன் மனைவியிடம சமையலைக் கூற அவளும் அதை எல்லாம் செய்து வைப்பாளா?'' என்று கேட்டார்கள். ஆறுமுகமும் ''ஆமாம். உங்களுக்குச் சந்தேகம் இருந்தால் இப்போதே என்னுடன் என் வீட்டிற்கு வாருங்கள். நீங்களும் விருந்து சாப்பாடு சாப்பிடலாம்'' என்றான்.

மூன்று போக்கிரிகளும் ஆறுமுகத்துடன் அவனது ஊருக்குப் போய் அவனுடைய வீட்டை அடைந்தார்கள். அப்போது ஆறுமுகம் சொக்கியைக் கூப்பிட்டு ''இன்று என்ன சமையல்?'' என்று கேட்டான். அவளும் ''நீங்கள் முயலிடம் சொல்லி அனுப்பியபடி விருந்து சாப்பாடு தயாரித்து வைத்திருக்கிறேன்'' என்றாள்.



நால்வரும் விருந்து சாப்பாட்டைச் சாப்பிட்டார்கள். சாப்பாடு ஆறுமுகம் கூறியது போலவே இருந்தது கண்டு அந்த மூன்று போக்கிரிகளும் மகிழ்ந்து போனார்கள். அவர்கள் தமக்குள் கலந்து பேசிவிட்டுப் பிறகு ஆறுமுகத் திடம் ''நீ உன் முயலை எங்களுக்கு விற்று விடு. என்ன விலை வேண்டு மானாலும் கொடுக்கிறோம்'' என்றார் கள்.

ஆறுமுகம் முதலில் முயலை விற்க விரும்பாதவன் போல நடித்து முடி வில் அதை ஐயாயிரம் ரூபாய்க்கு அவர் களுக்குக் கொடுக்கச் சம்மதித்தான். மூன்று போக்கிரிகளும் ஐயாயிரம் ரூபாயை ஆறுமுகத்திடம் கொடுக் கவே ஆறுமுகமும் தான் மறைத்து வைத்திருந்த மற்ற முயலைக் கூடை யோடு எடுத்து வந்து அவர்களிடம் கொடுத்தான்.

அம் மூவரும் அந்த முயலிடம் ''நீ எங்கள் வீடுகளுக்குப் போய் நாங்கள் கூறும் சமையல்களைச் சொல்லி தயாரித்து வைத்திருக்கச் சொல்'' எனக் கூறி ஒவ்வொருவனும் தான் விரும் பிய சமையலைக் கூறி முயலை எடுத்து வெளியே விட்டார்கள். முயல் எங்கோ ஓடிப் போயிற்று.

மூன்று போக்கிரிகளும் தம் ஊருக் குப் போய்த் தம் வீடுகளில் விசாரித்த தும் முயல் ஒன்றும் அங்கு வரவில்லை என்று தெரிந்தது, கிழவன் தங்களை ஏமாற்றி விட்டான் என்பது அவர் களுக்குப் புரிந்துவிட்டது. அவர்கள் உடனே பாசூருக்குப் போய் ஆறுமுகத் தைக் கண்டு அவன் ஏமாற்றி விட்ட தாகக் கூறிக் கண்டபடி திட்டினார்கள். ஆறுமுகமும் பொறுமையாக எல்லா வற்றையும் கேட்டுவிட்டு ''முயலை அனுப்பு முன் அதன் உடலை நன்கு தடவி விட்டு அனுப்பினீர்களா?'' என்று கேட்டான். அவர்கள் இல்லை எனவே ஆறுமுகம் ''அப்படியானால் அது ஆவியாகிக் காற்றில் கலந்திருக் கும்'' என்றான்.

அப்போது மூன்று போக்கிரிகளும் ''இதென்ன கதை? எங்காவது முயல் ஆவியாகிப் போய்விடுமா?'' எனக் கூவினர். ஆறுமுகம் ''ஏன் முடியாது? இந்தக் காலத்தில் எல்லாம் நடக்கும். பசுமாடு ஆடாக மாறும் போது முயல் ஆவியாக மாறாதா?'' என்றான்.

மூன்று போக்கிரிகளும் பதில் பேச முடியாமல் அங்கிருந்து சென்றனர்.



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்

(3)

## வீர பாண்டிய கட்ட பொம்மன்

கருத்து: மீரா உக்ரா

ஓவியம்: கௌதம் சென்

தமிழ் நாட்டில் 18ம் நூற்றாண்டில் பாளையக்காரர்கள் குறு நில மன்னர்கள். அவர்கள் ஆற்காடு நவாபிற்காக வரி வசூலித்து வந்தார்கள். அவர்கள் தமக்கெனக் கோட்டைகளைக் கட்டிப் படைகளையும் வைத்திருந்தார்கள். 1792ல் ஆற்காட நவாப் வரி வசூலிக்கும் உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கொடுத்தபோது 72 பாளையக்காரர்கள் இருந்தனர்.













ஆயினும் நெல்லை மாவட்டக் கலெக்டர் ஜாக்ஸனை கட்டபொம்மன் சந்திக்கவேண்டு மென இணங்க வைத்தார்கள்.
ஜாக்ஸன் சுற்றுப் பய ணத்தில் உள்ளார் அவரை நீங்கள் குற்றாலத்தில் பார்க்கலாம்.
கட்டபொம்மன் 23 நாட்களுக்கு அங் கும் இங்கும் அலைக் களைக்கப்பட்டான்.


கடைசியில் அவன் ஜாக்ஸனை ராமநாத புரத்தில் சந்தித்த போது-
நீ என்ன சொல் கிறாய்?
ஒரு அரசகுமாரனுக்குக் காட்டப்படும் மரி யாதை கொடுக்கவில்லை. உட்கார ஆசனமும் அளிக்கப்படவில்லை.


நான் சொல்ல வேண்டி யதை வாள்கொண்டு என் நிலத்தில் கூறுகிறேன்.


கட்டபொம்மன் அவசர அவசரமாக போனபோது-
அவனைக் கைது செய்


ஒரு குள்ள நரிக் கூட்டமா ஒரு தமிழ்ப் புலி யைப் பிடிக்கப் போகிறது?
கட்ட பொம்மனும் அவனது ஆட்களும் போரிட்டவாறே பத்திரமாகத்தம்கோட்டையை அடைந்தனர்.


மேஜர் பானர்மென் கட்டபொம்மனின் கோட்டையை 1799 செப்டம்பர் 6ல் முற்றுகையிட்டான்.
மண் சுவர்களா! இதையா கோட்டை என்கிறீர்கள்!!


அடுத்த நொடியில்
ஆ...ஆ...ஆ...
அவர்களது ஈட்டிகள் கூராக நீண்டு உள்ளன சரியான குறியில் பாய்கின்றன.
யார் அந்த இளைஞன்?
கட்டபொம்மனின் தம்பி ஊமைத் துரை. அவனால் பேசவும் கேட்க வும் முடியாது.


கோட்டைக்குள்
அவர்கள் கோட்டையைத் தகர்க்க வரவே நாங்கள் அவர்களை முறியடித்தோம்.
அவர்கள் திரும்ப வரலாம். நாம் எச்சரிக்கை யாக இருப்போம்.


புதிய படைகள் எதிர்ப்பைத் தோல்வியுறச் செய்தன. ஆங் கிலப் படைகள் கோட்டைக்குள் புகுந்தன.
எங்கே வீரபாண்டி?
நாம் புலியின் குகையைப் பிடித்து விட்டோம். ஆனால் இன்னமும் புலி சுதந்திரமாய்த் திரிகிறதே.
கட்ட பொம்மன் தப்பி ஓடினான். ஆனால்

எந்தப் பாளையக்காரனும் அவனுடன் நட்புறவு கொள்ள விரும்பவில்லை.




கட்டபொம்மன் ஒரு காட்டில் மறைந்திருந்த போது புதுக் கோட்டை மன்னன் அவன் முன் திடீரென வந்தான்.




கிழக்கிந்தியக் கம்பெனி விசாரணை நடத்தியது. பானர்மென் பயமறியாத கட்டபொம்மனுக்கு தூக்கு தண்டனை விதித்தான். தண்டனை எல்லா பாளையக் காரர்களின் முன் நிறைவேற்றப்பட்டது. பானர்மென் தன் குறிப்பில் ''கட்டபொம்மன் சற்றும் மனம் தளரா மல் கூடியிருந்த பாளையக்காரர்களை ஏளனமாகப் பார்த்தவாறே தூக்குமேடைக்குச் சென்றான்'' என எழுதியுள்ளான்.





கட்டபொம்மன் நிமிர்ந்து நடந்து புளிய மரத்தை அடைந்து தூக்குக் கயிறின் சுருக்கைத் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டான்.




அர்ஜுனன் முன்னேறிச் சென்று கௌரவப் படையைத் தாக்கி சங்கநாதம் செய்தான். அந்த ஒலி கேட்டு பசுக்களும் மாடுகளும் நகரை நோக்கி ஓடலாயின. அர்ஜுனன் வேலை அப்போதே முடிந்துவிட்டது போலாகியது. ஆனால் அவன் துரியோதனனை எதிர்க்கையில் கௌரவர் படைகள் அவனைத் தாக்கலாயின. அது கண்டு அர்ஜுனன் ரதத்தை கர்ணன் இருக்குமிடத்திற்குச் செலுத்துமாறு உத்தரனிடம் கூறினான்.

கர்ணனைத் தாக்க வந்த அர்ஜுனனை சில வீரர்கள் எதிர்த்தார்கள். அர்ஜுனன் அவர்களில் பலரை அடித்து வீழ்த்தினான். சிலரைக் கொன்றான். அது கண்டு கர்ணன் கோபம் கொண்டு அர்ஜுனனைக் கடுமையாகத் தாக்கினான் ஆனால் அர்ஜுனனின் அம்புகளுக்கு பதில் சொல்ல முடியாமல் கர்ணன் பின் வாங்கினான். அது கண்டு அவனது வீரர்கள் அர்ஜுனனைக் கடுமையாகத் தாக்கலானார்கள்.

கிருபாச்சாரியார் வந்து அர்ஜுனனைத் தாக்கலானார். அர்ஜுனனும் கிருபாச்சாரியாரை எதிர்க்கலானான். கடும் சண்டை இருவரிடையே நடந்தது. முடிவில் கிருபாச்சாரியார் தான் தோற்றுப் போனார். கிருபாச்சாரியார் தோற்றதைக் கண்டு அவருக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த துரோணர் அர்ஜுனனைத் தாக்க வந்தார். அப்போது அர்ஜுனன் துரோணரை நமஸ்கரித்து ''குருவே! நாங்கள் வனவாசகாலத்தில் எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்து விட்டோம். எங்கள் மீது கோபம் கொள்ளாதீர்கள். முதலில் நீங்கள் அம்பை எய்து என்னைத் தாக்குங்கள். அப்போதுதான் நான் உங்களோடு போர் புரிய முடியும்'' என வேண்டினான்.

—கௌரவர் தோல்வி—



யோரை எதிர்த்துப் போர் புரிந்து அவர்கள் எல்லோரையும் தோற் கடித்து விரட்டினான்.

அப்போது பீஷ்மர் அர்ஜுனனை எதிர்க்க வந்தார். அர்ஜுனனும் அவரை எதிர்க்கலானான். கடும் போர் நிகழ பீஷ்மர் செயலற்றுப் போய் ரதத்திலேயே விழுந்து விட்டார். அவரது தேரோட்டி சட்டென ரதத்தை ஓட்டிக்கொண்டு அப்பால் சென்றான்

இதைக் கண்டு கோபம் கொண்டு துரியோதனன் அர்ஜுனனைத் தாக்க வந்தான். அர்ஜுனன் ஒரு அம்பைத் துரியோதனனின் மார்பிற்குக் குறி வைத்து அடித்தான். அடி தாங்க முடி யாமல் துரியோதனன் ஓடிவிட்டான். இதைக்கண்டு அர்ஜுனன் கேலியாகச் சிரித்தான்.

இதனால் ஆத்திரமும் ரோஷமும் அடைந்து துரியோதனன் மறுபடியும் அர்ஜுனனைத் தாக்க வந்தான். அவனோடு எஞ்சியிருந்த கௌரவப் படையும் வந்தது. அர்ஜுனன் அவர் களெல்லோருடனும் போர் புரிந்து மோகனாஸ்திரத்தை எய்து யாவரை யும் நினைவிழந்து விழும்படிச் செய் தான்.

அப்போது அர்ஜுனன் உத்தரனி டம் ''உத்தரா! நீ கீழே இறங்கி மா வீரர்களின் தலைப் பாகைகளை எடுத்து வா. கிருபர், கர்ணன், துரி யோதனன், அசுவத்தாமன் ஆகியோ ரின் வண்ணத் தலைப் பாகைகளை எடுத்து வா. பீஷ்மரிடமும் துரோண ரிடமும் மட்டும் போகாதே'' என் றான். உத்தரனும் அர்ஜுனன் கூறிய படியே ரதத்திலிருந்து இறங்கிப் போய் அந்த மாவீரர்களின் தலைப்

துரோணரும் முதலில் அம்பு எய்து அர்ஜுனனைத் தாக்கினார். அதற்குப் பிறகே அர்ஜுனன் அவரைத் தாக்கி னான். இருவரிடையே பயங்கரப் போர் நிகழ்ந்தது. போர்க் கலையில் தலை சிறந்தவரான துரோணரையே அர்ஜுனன் அம்புகளை எய்து திக்கு முக்காடச் செய்தான். இதைக் கண்டு கௌரவப் படை வெலவெலத்துப் போயிற்று.

துரோணரின் நிலை கண்டு அவரது மகன் அசுவத்தாமன் ஓடி வரவே அர் ஜுனன் துரோணரை விட்டு விட்டு அசுவத்தாமனைத் தாக்கலானான். அசுவத்தாமன் வெகு நேரம் கடுமை யாகப் போர் புரிந்தும். அர்ஜுனன் தான் வெற்றி பெற்றான். இவ்வாறு அர்ஜுனன் கர்ணன் கிருபாச்சாரி யார், துரோணர், அசுவத்தாமன் ஆகி

பாகைகளை எடுத்து வந்து ரதத்தில் ஏறிக் கொண்டான்.

அர்ஜுனன் தன் தேரைத் திருப்பிக் கொண்டு அங்கிருந்து போகும் போது பீஷ்மர் அவனைத் தடுத்தார். ஆனால் அர்ஜுனன் அவரை ஒன்றும் செய்யாமல் அவரது ரதத்தின் குதிரைகளைக் கொன்றுவிட்டுச் சென்றான்.

இதற்குள் துரியோதனன் தன் நினைவு பெற்று எழுந்தான். அர்ஜுனன் தங்கு தடையில்லாமல் போவதைக் கண்டு "அதோ அர்ஜுனன் போகிறான். அவனைத் தடுத்து நிறுத்துங்கள்" என்று உரக்கக் கூவினான். அதைக் கேட்ட பீஷ்மர் "துரியோதனா! ஏன் இப்படிக் கத்துகிறாய்? எல்லோரும் தம் நினைவிழந்து விழுந்து கிடப்பது உனக்குத் தெரியவில்லையா? அர்ஜுனனால் உங்கள் எல்லோரையும் கொன்றிருக்க முடியும். ஆனால் அவ்வாறு செய்யாமல் உங்கள் தலைப் பாகைகளை மட்டும் எடுத்துக் கொண்டான். அதனால் நீ உன் தோல்வியை ஒப்புக் கொள். அவன் பசு மாடுகளை ஓட்டிச் செல்லட்டும்" என்றார்.

பீஷ்மர் கூறியபடி கௌரவர்கள் தோல்வியை ஒப்புக் கொண்டு திரும்பிப் போகத் தீர்மானித்தார்கள். கௌரவர்கள் திரும்பிப் போவது கண்டு அர்ஜுனன் பீஷ்மரையும் துரோணரையும் வணங்குவதுபோல அம்புகள் எய்துஅவர்களது பாதங்களருகே விழச் செய்தான். ஆனால் வேறொரு அம்பால் துரியோதனன் அணிந்திருந்த கிரீடத்தை உடைந்து விழும்படிச் செய்தான். அதன் பிறகு அவன்உத்தரனிடம் "நாம் எதிரிகளை



புறமுதுகு காட்டி ஓடும்படிச் செய்து விட்டோம். பசுமாடுகளைக் காப்பாற்றி விட்டோம். இனி தலைநகருக்குச் செல்லலாம். அதற்கு முன் நான் எடுத்த ஆயுதங்களைப் பழைய இடத்தில் வைக்க வேண்டும். அதனால் ரதத்தை அங்கு ஓட்டிச் செல்" என்று கூறினான்.

உத்தரனும் ரதத்தைத் ஓட்டிப் போய் பெரிய மரத்தடியே நிறுத்தவே அர்ஜுனன்தான் எடுத்த ஆயுதங்களை அந்த மரத்தின் மீது ஏறி முன்பிருந்தபடி வைத்தான். பிறகு இறங்கி வந்து உத்தரனை ரதத்தில் உட்காரச்சொல்லி அவன் தேரோட்டியின் ஆசனத்தில் அமர்ந்து கொண்டான். அவன் உத்தரனிடம் "பாண்டவர்களாகிய நாங்கள் உன் தந்தையிடம் இருந்ததை உன் தந்தை அறிந்தால் அவர் பயந்து விடு



வார். அதனால் நான்தான் கௌரவர்களைத் தோற்கடித்து விரட்டினேன் என்று அவரிடம் கூறாமல் நீயே அவர்களை விரட்டியதாகக் கூறிவிடு'' என்றான்.

உத்தரனும் ''நான் எதுவும் செய்யாது போனாலும் நீங்கள் கூறியபடியே என் தந்தையிடம் கூறிவிடுகிறேன்'' என்றான். அதன் பின் அவர்கள் சற்று இளைப்பாறிவிட்டு பசுக்களை ஓட்டிச் செல்பவர்களிடம் 'நீங்கள் மன்னரிடம் உத்தரன் வெற்றி பெற்றதாகக் கூறுங்கள்'' என்று சொல்லி அனுப்பினார்கள்.

இதற்குள் விராட மன்னன் சுசர்மனைத் தோற்கடித்து விட்டுத் தலைநகருக்கு வந்து விட்டான். உத்தரன் பிரகன்னளையுடன் கௌரவர்களை எதிர்க்கச் சென்றிருக்கிறான் என்பதைக் கேட்டு அவன் பயந்து ''ஐயோ! உத்தரன் எந்த மாவீரனின் துணை இல்லாமல் ஏன் போனான்? அவனுடன் அலியான பிரகன்னளையா போயிருக்கிறான்? அவனால் உத்தரனுக்கு என்ன உதவி செய்துவிட முடியும்?'' என்று புலம்பினான். அதைக் கேட்ட கங்கபட்டர் ''அரசே! கவலைப்படாதீர்கள். பிரகன்னளை உத்தரனுடன் இருக்கும் போது அவனுக்கு வெற்றி நிச்சயம் கிடைக்கும்'' என்று ஆறுதல் கூறினார். மன்னனோ ''அவனால் கௌரவப் படையை எப்படி வெல்ல முடியும்?'' எனக் கேட்கவே கங்கபட்டரும் ''பிரகன்னளை இருக்கையில் உத்தரனை தேவர்களால் கூடத் தோற்கடிக்க முடியாது'' என்றார்.

விராடனோ ''நீங்கள் என்னவோ என் மனம் ஆறுதல் அடைய வேண்டும் என்பதற்காக இப்படிக் கூறுகிறீர்கள். உத்தரனோ போர் அனுபவம் இல்லாதவன் அவனால் மாபெரும் கௌரவப் படையை வெல்ல முடியாதே'' எனக் கூறினான்.

அப்போது உத்தரன் வெற்றி பெற்று மாடுகளை மீட்டு கொண்டு வந்து கொண்டிருக்கிறான் என்ற செய்தி விராட மன்னனுக்குக் கிடைத்தது. அப்போது மன்னனருகில் இருந்த கங்கபட்டர் ''நான்தான் சொன்னேனே. பிரகன்னளை இருக்கும் போது உத்தரனுக்கு வெற்றி நிச்சயம் என்று. அப்படியே நடந்திருக்கிறது'' என்றார்.

விராட மன்னனோ ''என் மகன் வெற்றி பெற்று விட்டான் என்று செய்தி வந்து விட்டது. நீங்களென்

னவோ பிருகன்னனை இருப்பதால் தான் உத்தரனுக்கு வெற்றி என்று கூறிக் கொண்டே இருக்கிறீர்களே. பிரகன்னனை ஒரு அலி அவனால் போரிடவா முடியும்?'' என்று எரிச்சலோடு கேட்டான். பிறகு அவன் தன் மகனின் வெற்றிக்கான மகிழ்ச்சியில் கங்க பட்டருடன் சதுரங்கம் ஆடலானான்.

அப்போதும் மன்னன் ''பார்த்தீரா என் மகன் எப்படிப்பட்ட வீரன் என்று? அவன் மாபெரும் கௌரவப் படையையே அடித்து விரட்டி பசுக்களை மீட்டு வந்துவிட்டானே. அவன் முன் பீஷ்மரும், துரோணரும், கர்ணனும், கிருபாச்சாரியாரும், அசுவத்தாமனும் எதிர்த்து நிற்க முடியவில்லை. பார்த்தீர்களா அவன் கௌரவ வீரர்களையே வென்று விட்டான்'' என்று பெருமை பொங்கக் கூறினான். அப்போதும் கங்கபட்டர் ''பிரகன்னனை உத்தரனோடு இருந்ததால் தான் இந்த வெற்றி கிடைத்தது'' என்றார். இதனால் கோபம் கொண்டு விராட மன்னன் பகடைக் காய்களை கங்கப்பட்டரின் முகத்தில் விட்டெறிந்து ''இன்னமுமா அந்த பிரகன்னனையைப் புகழ்கிறீர்? என் மகன் வெற்றி பெற்றது உமக்குப் பொறுக்கவில்லையா?'' என்று கேட்டான்.

கங்கபட்டரும் ''பீஷ்மர் துரோணர், கர்ணன், அசுவத்தாமன் போன்ற பெரும் வீரர்களை எதிர்ப்பது சாமான்யமா? அந்த சக்தி பிரகன்னளைக்கு உள்ளது'' என்று கூறித் தன் மூக்கில் ஏற்பட்ட காயத்தின் ரத்தம் கீழே விழாதபடி தடுக்க முயன்றார். இதற்



குள் சைரந்திரி ஓடி வந்து கங்கபட்டரின் ரத்தம் தரை மீது விழாதபடித்தன் முன்தானையில் பிடித்துக் கொண்டாள். இதைக்கண்ட விராட மன்னன் ஆச்சரியப்பட்டான்.

இச் சமயத்தில் உத்தரன் பிரகன்னளையுடன் அரண்மனைக்குள் வந்தான். கங்கபட்டர் ஒரு வீரனிடம் ''நீ போய் பிரகன்னளையைத் தடுத்து இங்கே வரவிடாதே. அவன் என்னை இந்த நிலையில் பார்த்தால் இந்த அரச குடும்பமே அழிந்து விடும்'' என்று கூறி அனுப்பினார். அந்த வீரனும் பிரகன்னளையை வழியில் தடுத்து நிறுத்தவே, உத்தரன் மட்டும் தன் தந்தையைக் காணச் சென்றான். அவன் முதலில் தன் தந்தையின் கால்களில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு கங்கபட்டரின் கால்களிலும் விழுந்து

வணங்கி எழுந்து நின்றான்.

அப்போது கங்கபட்டரின் மூக்கில் காயம் ஏற்பட்டுள்ளதைக் கண்ட உத்தரன் உணர்ச்சிவசப்பட்டு ''யார் இந்த மகானைக் காயப்படுத்தியது? அவனை லேசில் விட மாட்டேன்'' என்று கத்தினான். அப்போது விராட மன்னன் ''நான்தான் பகடைக் காய்களால் இவரை அடித்தேன். இவர் நொடிக்கு நொடி பிரகன்னளை உன்னுடன் இருந்ததால்தான் உனக்கு வெற்றி கிடைத்தது என்று கூறி அந்த அலியைப் புகழ்ந்து கொண்டிருந்தார். அந்த அலி உன்னோடு இருந்ததால் தான் உனக்கு வெற்றி கிடைத்ததா'' என்றான்.

உத்தரனோ ''இவர் மகான். முதலில் இவரிடம் மன்னிப்பு கேளுங்கள்'' எனவே விராட மன்னனும் கங்க பட்டரிடம் தன்னை மன்னிக்கும் படி வேண்டினான். கங்க பட்டரும் ''மன்னா! எனக்கு உங்கள் மீது கோபமே இல்லை என் காயமும் உலர்ந்து விட்டது. நல்லவேளை, அதிலிருந்து ஒரு சொட்டு ரத்தம் கூடத் தரை மீது விழவில்லை. அது மட்டும் விழுந்திருந்தால் உன் நாடே நாசமாகி இருக்கும்'' என்றார்.

இதற்குச் சற்று நேரத்திற்குப் பின் பிரகன்னளை வந்துவிராட மன்னனை வணங்கி நின்றாள். அப்போது விராட மன்னன் பிரகன்னளையும் கேட்கட்டும் என்று தன் மகன் உத்தரனிடம் ''மகனே! நீ பீஷ்மர், துரோணர், கர்ணன், அசுவத்தாமன் போன்ற மாபெரும் வீரர்களை எல்லாம் வென்று விட்டு வந்திருக்கிறாய், நம் பசுமாடுகளை எல்லாம் மீட்டும் விட்டாய். இதற்காக நான் பெருமைப்படுகிறேன். எனக்குத் தகுந்த மகன் என்பதை நிருபித்து விட்டாய்'' என்று ஒரேயடியாக மகிழ்ந்து போய்க் கூறினான்.

அதைக் கேட்ட உத்தரன் ''தந்தையே, நான் இந்த வெற்றியும் பெறவில்லை. மாடுகளை மீட்கவுமில்லை. யாரோ ஒரு தேவ புருஷன் தோன்றி இவற்றை எல்லாம் செய்தான். எதிரிகளைப் பார்த்து பயந்து ஓட முயன்ற என்னைத் தடுத்து ரதத்தில் உட்கார வைத்து என்னை ரதத்தை ஓட்டச் சொல்லி அவன் தான் போர் புரிந்து வெற்றியடையும்படிச் செய்தான்'' என்றான்.



# அம்புலிமாமா செய்திகள்

**'ஷாக்' பற்றி ஒரு தகவல்!**

மின் சாதனங்களைக் குழந்தைகள் தொடக்கூடாது என்றும், தொட்டால் 'ஷாக்' அடித்து உயிருக்கே ஆபத்து எனவும் எச்சரிக்கிறோம். கொல்லத்தைச் சேர்ந்த ராஜ்



என்ற 13 வயது சிறுவன் தான் வாழ்வில் முன்னேற முடியாதது கண்டு தான் உயிர் வாழ்வது வீண் என எண்ணினான். அதனால் ஒரு மின் கம்பத்தில் ஏறி மின் கம்பியைத் தொட்டு 'ஷாக்'கால் உயிரைக் போக்கிக் கொள்ள விரும்பினான். ஆனால் அவன் மின் கம்பியை தொட்டதும் 'ஷாக்' அடிக்கவில்லை. மற்றவர்களை மின் சக்தி தாக்குவது போல் தன்னைத் தாக்க அதனால் இயலவில்லை என அவன் கண்டு கொண்டான். இதை அவன் தான் வாழ்வ தற்குச் சாதகமாக்கிக் கொண்டான். இந்த வித்தையை இப்போது எல்லோருக்கும் காட்டி அவன் பணம் சம்பாதிக்கிறான். அவன் தன் உடலில் கம்பிகளைக் கட்டி 38,000 ஒல்ட் மின் சக்தியை அவற்றில் புகுத்திக் காட்டுகிறான். பொறிகள் கிளம்பினாலும் அவனுக்கு எவ்வித ஆபத்து ஏற்படவில்லை 'கரண்ட் மோகன்' என்று கின்னஸ் புத்தகத்திலும் இவன் இடம் பெற்று விட்டான்!

**தங்க இதயம்**

பஞ்சாபைச் சேர்ந்த நரேந்திர குமாரின் இதயம் உண்மையிலேயே தங்கத்தால் ஆனது. இதய சிகிச்சை பெற அவர் டில்லியிலுள்ள ஒரு மருத்துவமனைக் குச் சென்றார். அங்கு அவரது இதயத்திற் குப் போகும் இரத்தக் குழாய்க்குள் சுமார் ஒரு கிராம் எடையுள்ள 24 காரட் தங்க வலை பொருத்தப்பட்டு ரத்த ஓட்டம் சீர் படுத்தப்பட்டது. உலகிலேயே இப்படித் தங்கத்தைப் பயன்படுத்தியது இதுதான் முதல் தடவை அது என்றென்றும் அந்த ரத்தக் குழாயில் இருக்கும் என்றும் அத னால் ஆபத்து எதுவும் இல்லை என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். எனவே நரேந் திரகுமார் உண்மையிலேயே தங்கமான இதயம் கொண்டிருக்கிறார் என்பது சரி தானே!



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# பரத்பூர் பறவைகள் சரணாலயம்





பரத்பூர் டில்லியிலிருந்து 180 கி.மீ. தொலைவிலுள்ள வரலாற்றுப் புகழ் பெற்ற நகர். இங்கு பதினெட்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கோட்டை ஒன்றும் உள்ளது. இந் நகரருகே 29 ச.கி.மீ. பரப்பில் அழகிய 'கேல தேவ் தேசிய பூங்கா உள்ளது. இதில் தான் பறவைகளின் சரணாலயம் உள்ளது. இதைப் பார்க்க தினமும் சுற்றுலாப் பயணிகள் வந்த வண்ணம் இருக்கிறார்கள்.

இங்கு கோவில் கொண்டுள்ள பகவானின் பெயரால் இப்பூங்கா அமைக்கப்பட்டிருக்கிறது. இங்கு அழகிய பரப்பில் நீர் நிலைகளும், அடர்ந்த புதர்களும், கால்வாய்களும் உள்ளன. இதனால் பலபட்சிகள் இங்கு வந்து தங்கி முட்டைகளும் இடுகின்றன. இங்கு 320 வகைப் பறவைகளைக் காணலாம். வட சைபீரியா, சீனா ஆகிய நாடுகளிலிருந்து கூட பறவைகள் இங்கு வந்து எல்லோர் மனதையும் கவர்வது குறிப்பிடத்தக்கது.

முன்பு இந்த இடம் பரத்பூர் மன்னர் வேட்டையாடும் காடாக இருந்தது. அதனால் 1964ல் இங்கு வேட்டையாடுவது தடை செய்யப்பட்டு. இதைப் பாதுகாப்பு இடமென அரசாங்கம் அறிவித்தது. பறவைகளின் சொர்க்கம் என இதை உலகமே புகழ்கிறது. பறவைகளைக் கால்வாய்களிலும் நீர் நிலைகளிலும் பார்க்க இங்கு சிறு படகுகள் உள்ளன. சைக்கிள்களிலும் சைக்கிள் ரிக்ஷாக்களிலும் போய்ப் பறவைகளைப் பார்க்கவும் இங்கு அனுமதிக்கிறார்கள். பறவைகள் மட்டுமல்லாமல் இப்பூங்காவில் மான்களும் முயல்களும் காட்டுப் பன்றிகளும் உள்ளன. சிற்சில சமயங்களில் மலைப் பாம்புகள் கூடத் தென்படுகின்றன.

# தர்ம குப்தன்

சந்திரவம்சத்து இளவரசன் தர்ம குப்தன். ஒருமுறை அவன் காட்டில் வேட்டையாடச் சென்றான். அவன் தன் ஆட்களை விட்டு விலகி தனியே சென்று விட்டான். அப்போது நன்கு இருட்டி இரவாகி விட்டது. அவன் ஒரு மரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

அப்போது ஒரு சிங்கம் ஒரு கரடியைத் துரத்திக் கொண்டு வரவே அந்தக் கரடியும் தர்மகுப்தன் ஏறி இருந்த மரத்தின் மீதுதாவி சிங்கத்திற்கு அகப்படாமல் உயரத்தில் உட்கார்ந்தது. சிங்கம் மரத்தில் ஏற முடியாமல் மரத்தின் கீழ் இருந்தது. அது கண்டு கரடி தர்மகுப்தனிடம் "இன்றிரவு நாம் ஒருவருக்கு மற்றவர் காவல் காத்துக் கொண்டு சிங்கத்திடமிருந்து தப்புவோம். முதலில் நான் காவலாக இருக்கிறேன். நீ அப்போது தூங்கு. எனக்குத் தூக்கம் வந்ததும் உன்னை எழுப்புகிறேன். நீ அப்போது எனக்கு காவலாக இரு. நான் தூங்குகிறேன்" என்றது. தர்மகுப்தனும் அதற்கு இணங்கினான். முதலில் தர்மகுப்தன் தூங்கவே கரடி காவலாக இருந்தது.

அப்போது சிங்கம் கரடியிடம் "நீ அந்த மனிதனைக் நீ கீழே தள்ளி விடு" என்றது. ஆனால் கரடியோ முடியாது என்று கூறியது. நள்ளிரவானதும் கரடி தர்மகுப்தனை எழுப்பி "இனி நான் தூங்குகிறேன். நீ எனக்குக் காவலாக இரு" எனவே தர்மகுப்தனும் காவல் காத்தான். கரடி தூங்கியது.

அப்போது சிங்கம் அவனிடம் "நீ கரடியைக் கீழே தள்ளு. நான் உன்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறேன்" என்றது. தர்மகுப்தனும் கரடியைக் கீழே தள்ளினான். ஆனால் கரடி கீழே விழாமல் மரத்தை பலமாகப் பற்றிக் கொண்டது. அது தர்மகுப்தனின் துரோகச் செயலுக்காக அவனுக்கு சாபம் கொடுத்தது. தர்மகுப்தன் பைத்தியம் பிடித்து அலைந்தான். ஜைமினி முனிவர் கூறியபடி நீண்ட காலத்திற்குப் புஷ்கரத்தில் மூழ்கி எழவே அவனது பைத்தியம் தெளிந்தது.



## உங்களுக்கு தெரியுமா?

### குல்லாய்

வெளியிலிருந்தும் குளிரிலிருந்தும் தப்ப இந்நாட்களில் குல்லாய் அணிவோரின் தொகை குறைந்து விட்டது. 1940 வரை அநேகமாக யாவரும் வெளியே செல்லும் போது குல்லாய்களை அணிந்து கொண்டே சென்றார்கள். இப்போதும் சில சீருடைகளுக்கும், மதத்தினர் சிலருக்கும் குல்லாய் ஒரு அங்கமாக விளங்கி வருகிறது. ரஷ்யன் ஃபர் ஹேட், ஸ்பானிஷ் சாம்ப்ரேரோ, முதலியன முகத்தில் குளிரோ வெயிலோ படாமல் பாதுகாக்கின்றன. இவை ஒருவகை ரோமத்தால் தயாரிக்கப் படுபவை. வட அமெரிக்காவில் சிவப்பு இந்தியர்கள் அணியும் தலைப்பாகைகள் அவர்களது அந்தஸ்தையும் அதிகாரத்தையும் காட்டுவதாக உள்ளன. அவர்களது தலைவன் மிகப் பெரிய தலைப் பாகையை அணிகிறான். பிஷப்களின் தலைப் பாகைகள் மேல் புறம் வளைவு கொண்டுள்ளது. எகிப்தில் உடைக்கேற்ப தலைப் பாகைகளை அணிகிறார்கள்.





## வானவில்





### சம சீர் வடிவம்

வண்ணத்துப் பூச்சிகளின் இறக்கைகள் அழகானவை. அவற்றின் உடலமைப்பு இறக்கைகளுக்கு ஏற்ப உள்ளது. அவ்ற்றின் இரு புறங்களையும் கவனித்துப் பார்த்தால் இது நன்கு தெரியும். உடலின் நடுவே ஒரு கோடிட்டுப் பார்த்தால் அதன் ஒரு பகுதி மற்ற பகுதியைப் போலவே எல்லா விதத்திலும் இருக்கும். இது போல மனித உடலிலும் கோடிட்டுப் பார்த்தாலும், ஒரு பகுதி மற்ற பகுதியைப் போல இருக்கும். சிற்பிகள் இந்த அடிப்படையில்தான் சிலைகளை சமசீராக வடிக்கிறார்கள். 17, 18, 19 நூற்றாண்டுகளில் இவ்வித ஆய்வின் பால் அதிக கவனம் செலுத்தப்பட்டதைக் காணலாம்.

சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(கிழக்கிந்தியக் கம்பெனியின் கவர்னர் ஜெனரலான லார்ட் டெல்ஹௌஸி ஒரு ஆணை யிட்டார். அதன்படி ஒரு சமஸ்தான மன்னர் வாரிசில்லாமல் இறந்து விட்டால் அந்த சமஸ் தானம் ஆங்கிலேயருக்குச் சொந்தமாகி விடும். இதனால் ராணி லக்ஷ்மி பாயும் நானாசாகிபும் தம் அரசு உரிமைகளை இழந்தனர். இச்சமயம் ஆங்கிலேயரிடம் வேலைக்கமர்ந்த சிப்பாய்கள் தாம் மிருகங்களை விட கேவலமாக நடத்தப்படுவதால் கொதித்தெழுந்தனர். ஆங்கில அதிகாரிகள் இந்திய மக்களிடம் கொடூரமாக நடந்து கொண்டனர். ஒரு இந்தியனைக் கொல்வதோ அல்லது துன்புறுத்துவதோ அவர்களுக்கு விளையாட்டாக இருந்தது. அப்போது மங்கள பாண்டே என்ற சிப்பாய் புரட்சியை ஆரம்பித்தான். அதன்பின் நாடு முழுவதும் ஆங்கிலேயருக்கு எதிர் திரும்பியது. முதலில் மீரட்டிலுள்ள சிப்பாய்கள் கலகம் புரிந்தனர்-)

நானா சாகபின் கோட்டைக்கு வந்த ராணி ல்க்ஷ்மிபாய் சிப்பாய்களின் கலகம் பற்றி அறிந்து கொண்டாள். மீரட் சிப்பாய்கள் டில்லிக்குப் போய் அந்நகரைக் காவல் காத்த ஆங்கிலப் படை வீரர்களைத் தோற்கடித்தார்கள். அது மட்டுமல்ல, முகலாய வம்ச வழியாக வந்த பகாதுர்ஷாவை இந்தியாவின் சக்கரவர்த்தி என அவர்கள் பீரகடனப் படுத்தினார்கள். கிழக்கிந்தியக் கம்பெனி அவரது அதிகாரங்களைக் கைப்பற்றி இருந்தது. இப்போது அதன் முகத்தில் கரி பூசியது போலாயிற்று!

இதைக் கேட்ட லக்ஷ்மிபாய் ''அண்ணா! ஒரு தலைவன் இல்லாமல் சிப்பாய்கள் இவ்வளவு செய்திருக்கும் போது நாம் எதுவும் செய்யாமல் இருப்பதா? நீங்கள் பேஷ்வா. உங்கள் ஆணைப்படி நடக்க எவ்வளவோ

பேர்கள் இருக்கிறார்கள். நீங்களும் செயலில் இறங்குங்கள்'' என்றாள். நானாசாகிபும் ''நம்மைப் போல எண்ணம் கொண்டவர்கள் இந்நாட்டில் இருக்கிறார்கள். நாம் எண்ணுவது போல் எல்லாம் நடக்கும்'' என்றான்.

ராணி தன் வீரர்களுடன் ஜான்சிக்குச் சென்ற போது நானாசாகப் தன் சில வீரர்களையும் அவளுடன் அனுப்பினார். ஏனெனில் சிப்பாய்களின் கலகத்திற்குப் பிறகு ஆங்கிலேயர்கள் சமஸ்தான மன்னர்களைக் கண்காணித்து வந்தனர். கான்பூரிலிருந்த ஆங்கிலயப் படைத்தலைவன் வீலர் நானா சாகபிடம் கலகம் வந்தால் அவன் ஆங்கிலேயருக்கு உதவி புரிவானா என்று கேட்டான். நானா சாகபோ அந்நிலையில் அவர்கள் கான்பூரை விட்டு வெளியேறி அலகாபாத்திற்கோ அல்லது வேறு எங்காவதோ ஓடிப் போய் விடுவதுதான் நல்லது என்று பதிலளித் தான்!

ஆனால் கம்பெனி அதிகாரிகள் நானா சாகபின் அறிவுரையை ஏற்கவில்லை. அவர்கள் வழக்கம் போல மக்களைத் துன்புறுத்தி அவமானப் படுத்திக் கொண்டிருந்தார்கள். ஆனால் மக்கள் முன் போல அவற்றைப் சகித்துக் கொள்ளவில்லை. அவர்கள் தாம் பேஷ்வாவிற்கு மரியாதை காட்டி அவரது சொற்படி நடக்கப் போவதாக ஆங்கிலேயர்களிடம் கூறத் தொடங்கினார்கள்.

வீலர் எச்சரிக்கை அடைந்து ஒரு பலமான கோட்டையைக் கட்டினான். அதில் ஆங்கிலேயர்களுக்கு வேண்டிய உணவுப் பொருளையும் மற்ற பண்டங்களையும் சேகரித்து வைத்தான். ஆனால் விரைவில் ஆபத்து வருமென அவன் எதிர் பார்க்கவில்லை. கலகக்காரர்கள் திடீரென ஆங்கிலேயர்களைத் தாக்க ரகசியமாக ஏற்பாடுகளைத் செய்து கொண்டிருந்தார்கள். இப்படித் திட்டமிட்டவர்கள் தாந்





தியா தோப், அஜிமுல்லாகான், மற்றும் சிலர். இவர்கள் நானாசாகபின் நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமானவர்கள்.

திடீரென கலகக்காரர்கள் கம்பெனியின் ஆயுதக்கிடங்கையும் பொக்கிஷத்தையும் ஓரிரவில் சூழ்ந்து கொண்டார்கள். அவை ஆங்கில வீரர்களாலும் அதிகாரிகளாலும் நன்கு பாதுகாக்கப்பட்டு வந்த போதிலும் அவர்கள் இந்த திடீர் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. துப்பாக்கி குண்டுகள் பறந்தன. சில கலகக்காரர்கள் கொல்லப்பட்டார்களாயினும் ஆங்கிலேயர் வசமிருந்த அக்கட்டடத்தை கலகக்காரர்கள் கைப்பற்றி விட்டார்கள்.

வீலர் உடனே ஆங்கிலேயர்களையெல்லாம் தான் கட்டி வைத்த கோட்டைக்குள் போய் விடும்படி உத்திரவிட்டான். ஆங்கிலேயர்கள் அக்கோட்டைக்குள் சென்று கொண்டிருந்த போது கலகக்காரர்கள் அவர்களை ஒன்றும் செய்யவில்லை. ஏனெனில் நானாசாகப் அவர்களையெல்லாம் ஒட்டு மொத்தமாகத் தாக்க வேண்டுமெனக் கூறியிருந்தான்.

எல்லா ஆங்கிலேயர்களும் கோட்டைக்குள் சென்ற பின் நானா சாகப் வீலருக்கு ''நாங்கள் உங்களைத் தாக்கப் போகிறோம். இதற்குத் தயாராகுங்கள். எங்களது செயல்களில் ஒளிவு மறைவு இல்லை. உங்களைப் போல முதுகில் குத்த மாட்டோம்'' என ஒரு கடிதம் எழுதி அனுப்பினான்.

கோட்டை தாக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள் முற்றுகை இட்டவர்களை நோக்கிச் சுட்டார்கள். கலகக்காரர்களும் திருப்பிச் சுட்டார்கள். கோட்டைக்குள் உணவுப் பொருள்கள் இருக்கும் வரைதான் ஆங்கிலேயர்கள் தாக்குதலை எதிர்த்தார்கள். உணவுப் பொருள்கள் தீரவே அவர்கள் சமாதானக் கொடியைக் காட்டினார்கள். அவர்கள் சரணடைய வேண்டுமென நானாசாகப் தெரிவித்தான்.

ஆங்கிலேயர்கள் வரிசையில் வந்து நானாசாகப்பின் முன் நின்றார்கள். அப்போது அவன் அவர்களிடம் ''உங்கள் ஆட்சி முடிந்து விட்டது. நீங்கள் எங்கே போக விரும்புகிறீர்கள்?'' என்று கேட்க அவர்களும் அலகாபாத்திற்குப் போய் விடுவதாகக் கூறினார்கள். நானா சாகபும் அவர்கள் படகுகளில் ஏறச் செல்லத் தக்க வசதிகளைச் செய்யவே சுமார் ஆயிரம் ஆங்கிலேயர்கள் ஒருநாள் காலையில் படகுகளில் ஏறினார்கள். தாந்தியா தோப்

படகுகளை ஓட்டிச் செல்லுமாறு கட்டளை இட்டான்.

இச்சமயத்தில் எதிர்பாராத ஒன்று நிகழ்ந்தது. நதிக்கரையில் ஆங்கிலேயர்களின் கொடுமைகளால் தம் தந்தைகளையும் மகன்களையும் இழந்து விட்ட பலர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களது ஆத்திரம் ஆங்கிலேயர்களைப் பார்த்ததும் அதிகரித்தது. இவர்கள் தானே நம் தந்தைகளைக் கொன்றவர்கள் என்று சிலர் கோபம் கொண்டார்கள். வேறு சிலரோ இவர்கள் தானே நம் மனைவி மக்களைக் கொன்றவர்கள் என்று ஆத்திரம் கொண்டார்கள்.

அப்போது ஒருவன் ''இந்தப் பாதகர்களைத் தப்பிப் போக விடுவதா? இவர்கள் சுகமாக வாழ-வசதிகளைச்செய்து கொடுப்பதா? கூடாது. இவர்கள் உயிருடன் இங்கிருந்து போக விடக் கூடாது. இவர்களால் நான் என் தந்தையை இழந்தவன். அதற்கு நான் பழி வாங்க வேண்டும்'' என்று கத்தினான்.

அப்போது இன்னொருவன் ''ஆம் நீ சொல்வது சரிதான். இவர்களால் நான் என் மனைவி மக்களை இழந்து விட்டுத் தவித்துக் கொண்டிருக்கிறேன். நாமெல்லாம் இப்படித் துயரத்தில் ஆழ்ந்து கிடக்கையில் இவர்கள் இங்கிருந்து எல்லா வசதிகளுடன் அலகாபாத்திற்குப் போய் மற்ற ஆங்கிலேயர்களுடன் சுகமாக வாழ விடுவதா? இது நடக்காது. இதை நாம் எப்படியாவது தடுத்து விட வேண்டும்'' என்றான்.

இப்படி இருவர் கூறியதைக் கேட்டு மற்றும் பலரும் ''ஆமாம்.



இவர்கள் கூறுவது சரியே. இங்குள்ள நாமெல்லோரும் இவர்களால் ஏதோ விதத்தில் துன்புறுத்தப்பட்டு பாதிக்கப்பட்டவர்களே. எனவே இவர்களையெல்லாம் இப்போதே ஒரேயடியாக ஒழித்து விட வேண்டும்'' என்று கூவினார்கள். கான்பூரில் ஆங்கில ஆட்சி முடிந்து விட்டது என அறிந்ததும் பல இடங்களிலிருந்து சிப்பாய்கள் அந்த ஊருக்கு வந்தார்கள். அவர்களில் சிலர் திடீரென்று ஆற்றிலுள்ள படகுகளை நோக்கிச் சுட்டார்கள். வேறு சிலரோ ஆற்றில் குதித்துப் படகில் இருந்தவர்களை இழுத்து நீரில் தள்ளினார்கள். ''இவர்கள் எல்லோரையும் ஒழிக்கா விட்டால் இவர்கள் மற்ற ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து திரும்பி வந்து நம்மைத் தாக்குவார்கள்'' என்று அவர்கள் உரக்கக்

கூவினார்கள்.

இந்த சம்பவம் பற்றிய தகவல் நானாசாகபிற்குத் தாமதமாகக் கிடைத்தது. குழந்தைகளையும், பெண்களையும் கொல்ல வேண்டாம் என்று கட்டளை இட்டான். இதனால் நூற்று இருபத்தைந்து பெண்களும் குழந்தைகளும் காப்பாற்றப்பட்டனர். அவர்கள் அனைவரும் நானாசாகபின் கோட்டைக்குக் கொண்டு வரப் பட்டார்கள். அங்கு அவர்கள் நன்கு கவனித்துக் கொள்ளப்பட்டனர். சில வாரங்களுக்குப் பிறகு நானாசாகப் அவர்களை அலகாபாத்திற்கு அனுப்பி வைத்தான்.

ஆங்கிலேயர்களை மக்கள் பல ஊர்களில் தாக்கலானார்கள். அதற்குக் காரணம் அவர்கள் மக்களை அலட்சியப் படுத்திக் கொடூரமாக நடத்தியதே யாகும். இதனால் மக்கள் மனம் கொதித்தது. ஆங்கிலேயர்களைக் கண்டாலே வெறுப்பு கொண்டு ஆத்திரம் அடைந்தார்கள். ஆங்கிலேயர்கள் இதைச் சற்றும் உணரவில்லை. அவர்களில் பலர் கொல்லப்பட்டதைக் கண்டுப் அவர்கள் இந்தியர்களைக் கேவலமாகவே நடத்தித்தான் வந்தார்கள்.

கம்பெனி அதிகாரிகளையும் அதன் மற்ற ஆட்களையும் கொன்று விட்டால் தங்களது கஷ்டங்களைல்லாம் போய் விடுமென சிலர் நினைத்தது தவறு என்பது தெளிவாகியது. இந்தக் கலகங்களுக்குப் பின் கம்பெனி பழி வாஙகும் படலத்தை தொடங்கியது. ஆயிரக் கணக்கான அப்பாவி மக்கள் ஆங்கிலக் கோட்டைக்குள் கொண்டு செல்லப்பட்டனர். அங்கு அவர்கள் கீழே சிந்திய ரத்தத்தால் ஏற்பட்ட கறையைத் தம் நாக்கால் நக்கி சுத்தப் படுத்தும் படி நிர்பந்திக்கப்பட்டார்கள்.

கான்பூரில் தற்காலீகமாக ஆங்கில ஆட்சி முடிவுற்றதும் நானாசாகப் அப்பகுதியின் மன்னனென அறிவிக்கப் பட்டான். நகரே விழாக் கோலம் பூண்டது ஆங்கிலேயர்கள் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டனர் என்றே எல்லோரும் நம்பினார்கள். கொஞ்ச நஞ்சம் மிஞ்சியிருந்த ஆங்கிலேயர்கள் தம் தாய் நாட்டிற்குத் திரும்பிப் போய் விடுவார்கள் என்றே எல்லோரும் நினைத்தார்கள். இவ்வாறு கான்பூர் விழா கொண்டாடுகையில் ஜான்சியிலும் அமைதி நிலவவில்லை.





# வேண்டும் உயரிய நோக்கம்!

ஒரு ஊரில் கோடீஸ்வரன் என்ற பெரும் பணக்காரன் இருந்தான். அவன் மிகவும் அற்ப புத்தி படைத்தவன். தினமும் யாரையாவது ஒருவனைத்துன்புறுத்தி வேடிக்கை பார்ப்பது அவன் வழக்கம் அதற்காக அவன் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் செலவும் செய்வான். அதனால் கோடீஸ்வரனைச் சுற்றி எப்போதும் ஏழெட்டுப் பேர்கள் இருப்பார்கள். அவர்கள் வேடிக்கை பார்ப்பதற்கு என்றே அங்கே வந்து உட்கார்வார்கள்.

கோடீஸ்வரன் யாராவது ஒருவனைத் துன்புறுத்தி வேடிக்கை பார்த்து விட்டு அவனுக்குப் பணம் கொடுத்தாலும் பணம் வாங்கிக் கொள்பவனுக்கு சந்தோஷமே இராது. இதனால் கோடீஸ்வரனை மனதிற்குள் திட்டி வெறுப்புடன் போனவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

அந் நாட்டு மன்னன் மாறு வேடத்தில் நாட்டின் பல பகுதிகளில் போய் நிலைமையை நேரில் காணும் வழக்கத்தைக் கொண்டிருந்தான். அதன்படி அவன் கோடீஸ்வரனின் ஊருக்கும் ஒரு நாள் மாறு வேடத்தில் வந்தான். அவனுக்குக் கோடீஸ்வரனைப் பற்றி தெரிந்திருந்தது. எளிய குடியானவன் போல வந்த மன்னனை அடையாளம் தெரிந்து கொள்ளாமல் கோடீஸ்வரன் அவனைக் கூப்பிட்டுத் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் சிரித்து வேடிக்கை பார்க்க வேண்டுமென்பதற்காக ''உனக்கு எவ்வளவு பணம் வேண்டுமப்பா?'' என்று கிண்டலாகக் கேட்டான்.

மாறு வேடத்திலிருந்த மன்னன் சற்றும் தயங்காமல் ''பத்தாயிரம் வராகன்கள் வேண்டும்'' என்றான். அப்போது கோடீஸ்வரன் ''அப்படியானால் நீ முதலில் ஒரு 'பூம் பூம் மாடு போல வேஷம்' போட்டுக் கொண்டு தலையை ஆட்ட வேண்டும். உனக்கு

—பாபநாசம் சாமா—



மேளம் வாசிக்க ஏற்பாடு செய்யப் படும். நீ பத்து வீடுகளுக்கு அந்த வேஷத்தில் போய் நின்று தலையை ஆட்டி விட்டு வரவேண்டும் அப்படிச் செய்தால் நான் உனக்குப் பத்தாயிரம் வராகன்கள் கொடுக்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு தன் மாறு வேஷத்தைக் கலைத்துவிட்டு ''நான் யார் தெரியுமா? இந்த நாட்டு மன்னன். உன் திரு விளையாடல்களைக் கேள்விப் பட்டேன். அதை இன்று நேரிலும் கண்டேன். நீ மனிதன் அல்ல. உனக்கு ஆயுள் முழுவதும் சிறை தண்டனை விதிக்கிறேன்'' என்று கூறினான்.

கோடீஸ்வரன் இப்படி திடீரென நடந்தது கண்டு மன்னனின் கால்களில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். இதற்குள் விஷயம் கேட்ட கிராம அதிகாரி ஓடோடி வந்து மன்னனைக் கண்டு ''அரசே! முன்பு இந்தக் கோடீஸ்வரனின் தந்தை ஒரு முறை தங்கள் தந்தையின் உயிரைக் காத்ததால் அரசாங்கம் இவனது குடும்பத்திற்குப் பாதுகாப்பு அளித்து வருகிறது அதனால்தான் இவனை எதுவும் செய்ய என்னால் முடியவில்லை. இவன் செய்த தவறை மன்னித்து இவன் திருந்துவதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்'' என்றான்.

மன்னனும் கோபம் தணிந்து ''சரி. இவன் இவ்வூரிலுள்ள இவனது க்டும் பகைவனைத் தேர்ந்தெடுத்து ஒரு மாத காலத்திற்கு அவனுக்கு எல்லா நன்மைகளையும் வசதிகளையும் செய்து கொடுத்து உதவி வரவேண்டும். அவ்வாறு செய்வதால் அவனுக்கு நன்மை உண்டானால் நான் இவனை மன்னித்து ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறேன். அதன் பிற கும் இவனது நடத்தை நல்லதாக இருக்க வேண்டும்'' என்றான்.

கோடீஸ்வரனுக்கு அந்த ஊரில் பல பகைவர்கள் இருந்தார்கள். அவர்களில் அவன் யாரைத் தேர்ந்தெடுக்கப் போகிறான் என்று ஆவலுடன் அங்கிருந்தவர்கள் எல்லோரும் எதிர் பார்த்து நின்றார்கள். கோடீஸ்வரனும் சற்று யோசித்துவிட்டு ''நான் என் கடும் பகைவனான பரமனைத் தேர்ந்தெடுத்து அவனுக்கு உதவிகள் புரிந்து வருவேன்'' என்றான்.

கோடீஸ்வரனும் பரமன் என்ற தன் கடும் பகைவனைத் தேர்ந்தெடுக்கக் காரணம் இதுதான். ஒருமுறை பரமனின் காலில் காயம் பட்டு சரியான

வைத்தியம் செய்யாததால் பெரிதாக வீங்கி விட்டது. அதனால் அவன் வைத்தியரிடம் சென்று தன் வீங்கிய காலைக் காட்டினான். வைத்தியரும் காலைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு ''நீ இவ்வளவு நாட்கள் கழித்து வந்திருக்கிறாயே. உன் காலில் புரை ஏறிவிட்டது. அதைப் போக்கி உன் காலை முன் போலாக்கக் கொஞ்சம் செலவாகுமே இதற்கான தைலத்தை உனக்காகக் குறைந்த செலவில் தயாரித்துக் கொடுக்கிறேன். அதற்கு இருபது வராகன்களாகும். எப்படியாவது அந்தப் பணத்தைக் கொண்டு வா. தைலம் தயாரித்துக் கொடுக்கிறேன். அதைக் காலில் தடவிக் கொண்டு வா. வீக்கம் மறைந்து போய் கால் முன் போலாகி விடும்'' என்றார். வீக்கத்தைக் குறைத்து குணப்படுத்த விலை யுயர்ந்த தைலம் வாங்க வேண்டுமே. பரமனோ அன்றாடம் வேலை செய்து கூலி பெறுபவன். அவனிடம் பணம் இல்லை. அதனால் அவன் கோடீஸ்வரனிடம் போய்தன் நிலையைக் கூறி இருபது வராகன்கள் கடன் கேட்டான்.

கோடீஸ்வரனுக்கு ஒரே மகிழ்ச்சி; பரமனைத் துன்புறுத்தி வேடிக்கை பார்க்க அவன் விரும்பினான் அதனால் அவன் ''பரமா! உனக்கு நான் முதலில் சிகிச்சை செய்து விட்டு நீ கேட்ட பணத்தைக் கொடுக்கிறேன் அதன் பிறகு நீ வைத்தியரிடம் போய்த் தைலத்தை வாங்கிக் கொள்'' என்றான். பரமனும் அதற்கு இணங்கவே கோடீஸ்வரன் புண்ணில் உப்பையும் மிளகாய்ப் பொடியையும் தூவி அதன் மீது எலுமிச்சம் பழத்தைப் பிழிய வைத்தான். பரமன் வலி தாங்க முடி



யாமல் கத்தவே அதைக் கேட்டு கோடீஸ்வரன் விழுந்து விழுந்து சிரித்தான். பிறகு கட்டுகளை அவிழ்த்து பரமனை விடுவித்து அவன் கையில் இருபது வராகன்களை வைத்தான்.

பரமன் பளாரென்று கோடீஸ்வரனின் கன்னத்தில் அறைந்துவிட்டு ''நீ இன்று முதல் என் பரம விரோதி'' எனக் கத்திவிட்டுப் பணத்தோடு போனான். இந்தப் பரமனைத்தான் கோடீஸ்வரன் தேர்ந்தெடுத்தான்.

பரமனுக்கு எவ்வளவு உபகாரம் செய்தாலும் அவன் அதை நன்மையாக எடுத்து கொள்ளமாட்டான் என்று கோடீஸ்வரன் எண்ணினான். அவன் பெயரைக் கோடீஸ்வரன் கூறியதும் கிராம அதிகாரி பரமனை அழைத்து வரச் சொன்னான். கோடீஸ்வரனும் மன்னனிடம் ''இந்தப் பரமன் எனது



பரம விரோதி. நான் இவனுக்கு எல்லா விதத்திலும் உதவி புரிவேன். ஆனால் அதை அவன் ஏற்க மறுக்காதிருக்க வேண்டும்'' என்றான். கோடீஸ்வரன் எல்லோர் முன்னிலையிலும் பரம னுக்கு உதவ வாக்குறுதி அளித்தான்.

மன்னன் கிராம அதிகாரியிடம் ''இந்த ஒரு மாத காலத்தில் நடப்பதை யெல்லாம் நீ கண்காணிக்க வேண்டும். நான் ஒரு மாதத்திற்குப் பிறகு இவ்வூ ருக்கு வந்து நிலைமையை நேரில் கண்டு கொள்வேன்'' என்று கூறிவிட் டுச் சென்றான்.

அன்றிலிருந்து கோடீஸ்வரனின் நடத்தையில் பெருத்த மாறுதல் ஏற் பட்டது. முதலில் பரமனிடம் அவன் தன் தவறுகளுக்கெல்லாம் மன்னிப்புக் கோரினான். இனிமேல் அவனுக்கு எவ்விதக் கெடுதலும் செய்வதில்லை என்று வாக்களித்தான். அவ்வூரில் தனது அழகான வீடுகளில் ஒன்றை பரமனுக்குக் கொடுத்தான். தினமும் பரமனுக்கு விருந்தளித்து பலவித கலை நிகழ்ச்சிகளைக் காணவும் அவன் ஏற்பாடு செய்தான். அவன் பெயரில் கோவில்களில் அர்ச்சனை களை நடத்தினான் அவன் பரமனுக்கு இரண்டு ஏக்கர் நிலமும் கொடுத்தான். இனிமேல் பரமன் வீடு வாசல் வயல் களுடன் சுகமாக வாழலாம் என்றும் அவன் கூறினான்.

பரமன் அந்த ஒரு மாத காலத்தில் கோடீஸ்வரன் கொடுத்தவற்றை எல் லாம் ஏற்றுக் கொண்டான். எதையும் மறுக்கவில்லை. ஒரு மாத காலம் முடிந்ததும் மன்னன் அந்த ஊருக்கு வந்தான். கிராம அதிகாரியும் ஊர் பிர முகர்களும் கோடீஸ்வரன் பரமனுக் குச் செய்த உதவிகளையெல்லாம் கூறினார்கள். பரமனும் ''நீங்கள் சென்றதும் முதல் நாளே கோடீஸ் வரன் என்னிடம் மன்னிப்புக் கேட் கவே நான் அவன் மீது கொண்டிருந்த பகைமையை அன்றே விட்டு விட் டேன் அவனால் எனக்கு பெரும் நன் மையே ஏற்பட்டது'' என்று பணிவு டன் மன்னனிடம் கூறினான்.

அப்போது கோடீஸ்வரன் எழுந்து நின்று ''நான் கடந்த காலத்தில் பர மனின் உயிருடன் விளையாடி விட் டேன். பல தொல்லைகள் கொடுத் தேன். ஆனால் அவற்றை எல்லாம் நான் அவனிடம் கூறி ''என்னை மன் னித்து விடு'' என்று சொன்ன ஒரு வார்த்தை பகைமையைப் போக்கி விட்டது. ஒரு நல்ல சொல் இப்படிப் பட்ட நல்ல மாற்றத்தை ஏற்படுத்

தியதே. இது போல் பல சொற்களைக் கூறி பிறருக்கு நல்லது செய்யாமல் போனேனே என எண்ணி மனம் வருந்தினேன்'' என்றான்.

கோடீஸ்வரன் கூறியதைக் கேட்டு மன்னன் மட்டுமல்ல, மற்றவர்களும் ஆச்சரியப்பட்டார்கள். உண்மையிலேயே கோடீஸ்வரனின் மனம் மாறிவிட்டது என்பது அவன் கூறியதிலிருந்து அவர்களுக்கு தெரிந்துவிட்டது. இனி மன்னன் என்ன சொல்லப் போகிறான் எனக் கேட்க எல்லோரும் ஆவலாக இருந்தார்கள்.

மன்னன் கோடீஸ்வரனை உட்காரச் சொல்லிவிட்டுப் பரமனைப் பார்த்து ''நீ கோடீஸ்வரன் மீது கொண்ட பகைமையை மறந்து விட்டது ஒரு பெரிய விஷயமே. கோடீஸ்வரன் ஒரு மாத காலமாக உனக்குப் பல உபகாரங்களைச் செய்து வந்திருக்கிறானே. அவனுக்கு நீ பிரதியுபகாரம் செய்ய ஒரு போதும் நினைத்ததில்லையா?'' என்று கேட்டான்.

பரமனும் ''கோடீஸ்வரன் என் காயத்தில் உப்பு, மிளகாய்த் தூள், எலுமிச்சம் சாறு ஆகியவற்றைப் போட்டதால் எனக்கு ஏற்பட்ட எரிச்சலில் அவனைக் கண்டபடி திட்டினேன். அதற்குப் பிறகு நான் கோடீஸ்வரன் மீது கோபமே கொள்ளவில்லை. அவன் கொடுத்த பணத்தால்தான் என் காயம் குணம் அடைந்தது. அதனால் நான் அவனுக்கு மிகவும் கடன் பட்டிருப்பதாகவே எண்ணினேன். என் போன்ற ஏழைகளுக்கு எப்படியோ உதவி புரிபவன் இந்த கோடீஸ்வரனே. வேறு யார் உதவுகிறார்கள்? அரசாங்கம் கூட எங்களுக்கு சமயத்தில் உதவ வருவதில்லையே. இப்படிப் பட்டவர்கள் செய்வது போல அரசாங்கம் என் போன்ற ஏழைகளுக்கு உதவினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!'' என்றான்.

அது கேட்டு மன்னன் ''பரமா! நீ ஒரு முக்கியமான விஷயத்தை எனக்குக் கூறி இந் நாட்டிற்கே நன்மை செய்தாய். இனி ஏழைகளுக்கு உடனடியாக உதவும் திட்டங்களை அரசாங்கம் வகுத்து செயல்படுத்தும். கோடீஸ்வரனை நான் மன்னித்துவிட்டேன். அவனால்தானே இவ்வளவும் நடந்து எல்லோருக்கும் நன்மை ஏற்பட்டது'' என்று கூறிவிட்டு அங்கிருந்து தலை நகருக்குச் சென்றான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1998 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர் 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **பார்த்து மகிழும் காட்சி.** |
| இரண்டாவது போட்டோ | : **நினைத்து மகிழும் நிகழ்ச்சி.** |
| பரிசு பெற்றவர் | : **ஏ.ஜி. வெங்கடேஸ்வரன், ஆண்டி மடம்–621801.** |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., Chandamama Buildings, Chennai - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026. (India) Editor : NA[illegible]I REDDI.

PARLE

# பாடி பில்டர்




சுவை மற்றும் ஊட்டச்சத்து அடங்கிய பேக் தான் **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட். ஏனெனில், **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பேக்கில் பாலின் நற்குணங்கள் உள்ளன. ஒவ்வொரு வளரும் குழந்தைக்கு ஆதாரமாக விளங்கும் ஊட்டச்சத்து நிறைந்தது. ஆகையால் தான், **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் ஒரு ஆரோக்கியமான பிஸ்கட் மற்றும் சுவையானதும் கூட. இந்தியா முழுவதிலும் உள்ள பெரும்பாலான தாய்மார்களின் நம்பிக்கையை **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பெற்றிருப்பதே இதன் காரணமாகத்தான். இன்றே ஒரு **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பேக்கெட் வாங்குங்கள். உங்கள் குழந்தைக்குத் தேவையான ஆரோக்கியத்தை அளியுங்கள் **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட். இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்




• சுவை மிகுந்தது உண்மையான சக்தி நிறைந்தது •